# செந்தமிழ்ச் செல்வி




உள்ளுறை

வளரட்டும் தமிழுணர்வு ௧௨௯
மொழிஞாயிறு பாவாணரின்
வேர்ச்சொல் ஆய்வுத் தொடக்கம் ௧௩௧
சங்க நூல்களில் ஞாமல் ௧௩௩
சத்தணவுப் பத்தி ௧௩௪
கோச்செங்கணான் யார்? ௧௪௩
இராசராச சேதுபதி பாடிய
திருக்குறள் வெண்பா ௧௪௭
சோமாஸ்கந்த திருவுரு ௧௫௪
குடந்தையில் வினவுக் கூட்டம் ௧௫௬
ஆசிரியருக்குக் கடிதம் ௧௬௨
திருச்சியில் வினவுக் கூட்டம் ௧௬௩
மணிவிழாக்கண்ட வள்ளல்
நா. மகாலிங்கனார் ௧௬௬
கழகம் சுப்பையா பிள்ளை
—மறைமலையடிகளார்—தேவநேயப்
பாவாணர் அறக்கட்டளைகள் ௧௬௮
செய்திகளும் குறிப்புகளும் ௧௬௯
மதிப்புரை ௧௭௦

சிலம்பு-௫௭ வள்ளுவர் ஆண்டு-௨௦௧௪, பங்குனி Apr. '83 [பரல்-௮

## 'செந்தமிழ்ச் செல்வி'
(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௭ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௪, மாசி<br>ஏப்பிரல் 1983 | பரல் ௮ |
|---|---|---|


# வளரட்டும் தமிழுணர்வு

நம் நாடு விடுதலையடைவதற்கு முன் பல்வேறு சூழல்களில் தமிழ்மக்களிடையேயும், குறிப்பாகத் தமிழறிஞர்களிடையேயும் தமிழ் பயின்றோர்களிடையேயும் தமிழுணர்வு மிக்கிருந்தது. இந் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் தலைசிறந்த தமிழறிஞர்களான மறைத்திரு. மறைமலையடிகள், பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார், விபுலானந்த அடிகள், உ. வே. சாமிநாதையர், பேராசிரியர் கா. சுப்பிரமணியபிள்ளை, தமிழவேள் உமாமகேசுவரம்பிள்ளை, ந. மு. வேங்கடசாமி நாட்டார் போன்ற பேரறிஞர் பலர் வாழ்ந்து வந்தனர். கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் தமிழாசிரியர்களும் மாணவர்களும் எண்ணிக்கையளவில் குறைவாக இருந்தனர். எனினும் அவர்கள் தமிழுணர்வு மிக்கவர்களாக இருந்தார்கள். தமிழ்ப் பற்று என்பது அவர்களிடையே உண்மையாக நிரம்பியிருந்தது. தமிழ் வளர்ச்சிக்குத் தேவையான அடிப்படையான, ஆக்கபூர்வமான பணிகளை அவர்கள் நிரம்பச் செய்தனர். ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளுக்கு முன் நடைபெற்ற இந்தியெதிர்ப்புப் போராட்டமும் பின்னர் எழுந்த போராட்டங்களும் தமிழ்மக்களை ஒருங்கிணைத்து அவர்களிடையே தமிழ்ப்பற்றையும் தமிழுணர்வையும் நன்கு ஊட்டி வளர்த்தன.

ஆனால் இங்ஙனம் பல வழிகளிலும் தமிழ் பரவலாக வளர்ச்சி பெற்றுள்ள இந் நிலையில், முன்பு இருந்ததைவிடத் தமிழ் ஏதோ ஓர் உயர்வான இடத்தில் அமைந்துள்ளதைப் போன்ற தோற்றம் தான் காணப்படுகின்றதேயன்றி இன்றைய சூழ்நிலைகளை

ஆராய்ந்து பார்க்கின்றபோது, ஓரளவிற்குத் தமிழுணர்வு மங்கி வருகிற நிலையைத்தான் காண்கிறோம். இந்நிலை வருந்துதற்குரியதாயுள்ளது.

கழக ஆட்சியாளர் தாமரைச்செல்வர். வ. சுப்பையாபிள்ளை அவர்கள் தம் வாழ்வின் இறுதிக் காலத்தில் தமிழர்களிடம் தமிழுணர்வு அருகிவிட்டதைக்கண்டு வருந்தினார்கள். அவரைப் பார்க்க வந்த தமிழறிஞர்களிடையே 'தமிழ் படித்த நம்மவர்களிடையேகூடத் தமிழுணர்வு மங்கி வருகின்றதே' என்று அவர்கள் அடிக்கடி கூறி வருந்துவார்கள். எனவே, இந்நிலையில் தமிழின் அன்றைய நிலையினையும் இன்றைய நிலையினையும் ஒப்பிட்டுப் பார்த்தல் வேண்டும்.

முன்பு இருந்ததைவிட, தமிழன்னை பலதுறைகளில் பெருமையுடன் கோலோச்சி வருகிறாள். பேரறிஞர் அண்ணா அவர்கள் நம் நாட்டிற்குத் 'தமிழ் நாடு' என்ற பெயரைப் பெற்றுத் தந்தார்கள். அதற்கு முன்னரே அறிஞர் அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் காலத்திலேயே பள்ளிக்கூடங்களில் தமிழே பாடமொழியாக இடம் பெற்றது. பின்னர் ஆட்சிமொழியாகத் தமிழ் இடம்பெற்றுள்ளது. தமிழ் முதல்மொழியாக எல்லா நிலைகளிலும் கல்விக் கூடங்களில் உயர்ந்தது.

தமிழ்மொழிக்கு உலகோர் வியக்கும் வகையில் உலகத் தமிழ் மாநாடுகளைக் கண்டோம். டாக்டர். கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் வான்புகழ் வள்ளுவனுக்குக் கோட்டமே அமைத்தார். உலகில் வேறு எந்தப் புலவனுக்கும் கிடைக்காத பேறு இது. மாண்புமிகு புரட்சித் தலைவர், தமிழக முதல்வர் ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் தமிழன்னைக்குத் தனிப் பல்கலைக் கழகமே நிறுவியுள்ளார். உலகில் வேறு, எந்த மொழிக்கும் கிடைக்காத பேறு இது. தமிழ்ப் புலவர்கள் பாரதி, பாரதிதாசன் ஆகியோர் பெயரில் பல்கலைக் கழகங்கள் நிறுவப்பெற்றுள்ளன.

முன்பிருந்ததைவிட இந் நாளில் எண்ணிக்கையில் தமிழ்ப் பேராசிரியர்கள், அறிஞர்கள், ஆசிரியர்கள் கூடுதலாக உள்ளனர். முன்பு படித்ததைவிட, தமிழையே முதுகலைப் பாடமாகக் கொண்டு பட்டம் பெற்றவர்கள் ஆயிரக்கணக்கில் உள்ளனர். தமிழில் 'டாக்டர்' பட்டம் பெற்றவர்கள் நூற்றுக்கணக்கில் உருவாகியுள்ளனர். முன்பிருந்ததைவிட, தமிழில் ஆண்டுதோறும் நூல்கள் அதிக அளவில் வெளிவருகின்றன. நாள், கிழமை, பிறை, திங்கள் இதழ்கள் பல்வகை வண்ண மேலட்டைகளுடன் போட்டியிட்டுக்கொண்டு வெளிவருகின்றன.

ஆனால், இவ்வளவு ஆக்கப்பணிகட்கும் ஏற்பத் தமிழர் வாழ்வுக்குத் தேவையான, அடிப்படையான தமிழுணர்வு வளர்ந் திருக்கிறதா என்றால், அதுதான் இல்லை. அவ்வுணர்வு குறைந்து வருவது போன்ற காட்சி எழுந்துள்ளது. தமிழைப் படித்தவர் களிடையேயும் 'தமிழ்' மற்ற பாடங்களைப்போல் ஒரு பாடம்தானே இதனை மட்டும் ஏன் உணர்வுடன் படிக்கவேண்டுமென்ற எண்ணம் தோன்றியுள்ளது.

'தமிழுக்கு அமுதென்றுபேர்—இன்பத்
தமிழ்எங்கள் உயிருக்குநேர்'

என்றாரே பாவேந்தர்? அப்படி இன்றுள்ளவர்கள் தம்முயிருக்கு நேராகத் தமிழைக் கருதுகிறார்களா? என்பது ஐயமே.

'தமிழைப் பழித்தவனைத் தாய் தடுத்தாலும் விடேன்' என்று சீறிப்பாய்ந்த உள்ள உணர்வு இன்றிருக்கிறதா என்பதும் ஐயமே! 'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே முழங்கு' என்று முழக்கினாரே பாவேந்தர்? இன்று அந்த முழக் கத்தைக் கேட்கிறோமா? 'எங்கள் பகைவர் எங்கோ மறைந்தார்' என்று கூவி மகிழ்ந்தாரே? பகைவர்கள் உண்மையிலேயே மறைந்துவிட்டார்களா? சிங்கத்தின் திரளெனத் தமிழுணர்வு கொண்டோர் பொங்கியெழுந்ததைக் கண்டு பகைக் கூட்டம் தூள் தூளாகிவிடும் என்று கனவு கண்டாரே? அக் கனவு பலித்ததா?

இன்று இந்த நிலை ஏன் வந்தது. 'தமிழ்' 'தமிழ்' என்று கூறிக்கொண்டே தமிழர்களிடையே ஒரு சிலர் தமிழுணர்வு மங்கு வதற்கு வேண்டிய செயல்களில் ஈடுபட்டுள்ளனர். அறிவியல் வளர்ச்சி, நடைமுறை மொழி, கையாளுதல் போன்ற போர்வை களின் கீழ், தமிழை இன்று கலப்பு மொழியாக்கிப் பல வண்ண இதழ்களின் வாயிலாகத் தமிழை வணிகப் பொருளாக்கிவிட்டனர். 'மக்கள் இதைத்தான் விரும்பிப் படிக்கின்றனர்' என்று கூறிக் கொண்டு எதையெதையோ இன்று பலர் வெளியிடுகின்றனர். இப்படி எழுதுவதைத்தான் மக்கள் விரும்புகின்றனர் என்று சொல்லிக்கொண்டு எந்தெந்த மொழிகளையெல்லாமோ கலந்து எழுதுகின்றனர்.

உயர்மட்ட அளவில் உணர்வை வளர்க்க அரசும் அறிஞர் களும் முயன்று வருகையில் மக்கள் அளவில் பல்வேறு முயற்சிகள் அவர்களுடைய தமிழுணர்வை அழிக்க முயல்கின்றன. தாம் படித்த காலத்தில் இருந்த தமிழுணர்வு இன்று படிக்கும் மாணவர் களிடையே இல்லையே என்று தமிழாசிரியர்கள் கவலை கொள் கின்றனர். இந் நிலையே நீடித்துக்கொண்டு போனால் தமிழ்

உணர்வு என்பதே தேவையில்லாத ஒன்று என்ற நிலை வருமானல், அதில் வியப்பில்லை. தமிழ் பரவுவது வேறு; தமிழுணர்வு வளர்வது வேறு. உணர்வின்றித் தமிழ் பரவிப் பயனென்ன? எனவே, இனி அது பரவிய இடங்களில் ஆழக்கால் கொள்ள வேண்டும். தமிழுணர்விற்கு எதிரான முயற்சிகளை எதிர்த்து முறியடிக்கவேண்டும். வளர்ந்துவரும் தலைமுறையினரிடம் உண்மையான தமிழ்ப்பற்றை உண்டாக்கவேண்டும். 'எங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்ற நிலை உண்டானாலும் அதில் அலுவலக நோக்கு மட்டுமோ அல்லது வணிக நோக்கு மட்டுமோ இருந்து பயனில்லை. 'தமிழுணர்வு' தமிழரின் ஊன்கலந்து உயிர் கலந்து வளரவேண்டும். போலித் தன்மைகள் மறையவேண்டும். மறைமலையடிகள், பரிதிமாற் கலைஞர், திரு. வி. க., பெரியார், அண்ணு ஆகியோர் காலத்தில் இருந்த உண்மைத் தமிழுணர்வு மீண்டும் தலையெடுத்தல் வேண்டும்.

---

## அறிந்துகொள்வீர்!

[நாகை. த. சி. வேலன்]

எங்கெங்கு காணினும் தமிழ் முழக்கம்!
    ஏடுகளைத் திறந்தாலோ கவிதை வெள்ளம்!
மங்காத தமிழுக்கு மாண்பு சேர்க்க
    மன்றங்கள் ஆங்காங்கே மல்கி நிற்க
தங்குதடை யின்றிதமிழ் அரசு தானும்
    தம்பங்கைச் செய்வதற்கு ஆண்டு தோறும்
பொங்குபுகழ் புலவர்க்கு விழா வெடுக்கும்;
    போதுமிவை என்றால்நமக் கேது வேலை?

அடுத்துவர விருப்பதனை அறிதல் வேண்டும்
    அடிப்படையில் அன்றிருந்த தமிழுணர்வின்
அடித்தளங்கள் அணுஅணுவாய்ச் சிதைவ தற்கே
    அடிகோலும் அரசியலின் அலைகள் காண்பீர்!
படித்தவர்கள் பைந்தமிழின் நிலையை எண்ணி
    பயனுள்ள பணியாற்ற முனைதல் வேண்டும்
இடித்துரைப்பார் இல்லையெனில் ஏதி லார்தாம்
    அடுத்திருந்தே கெடுத்திடுவர்; அறிந்து கொள்வீர்!

# மொழிஞாயிறு பாவாணரின் வேர்ச் சொல்லாய்வுத் தொடக்கம்

**[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]**

(முன்பரல் - ௬௦௭ ஆம் பக்கத் தொடர்ச்சி)

கழக ஆட்சியருக்குப் பாவாணர் புலமை புரிகின்றது. அவர் தம் சொல்லாராய்ச்சி அழுத்தமும் புலப்படுகின்றது. தவத்திரு மறைமலையடிகள் மதித்துப் போற்றிய திறமும் அவர் அறிந்ததே. எனினும், வேர்ச் சொல் வரிசை எப்படி அமையும்? கட்டுரையாய் அமையுமா? அகர முதலியாய் அமையுமா? அகர முதலியிலும் எத்தனை எத்தனை வகைகள் உள்ளன? அவற்றுள் எவ்வகையில் அமையும் வேர்ச் சொல் வரிசை? ஒரு நூலாய் அமையுமா? பல மடலங்களாய்ப் பெரு நூலாய் அமையுமா? இவ்வையங்களையெல் லாம் எழுப்பிப் போலியாக (மாதிரியாக) ஒருசொல்லுக்கு விளக்கம் எழுதி விடுக்க வேண்டினர். இவ் வினவமும், விளக்க வேண்ட லும் கூட பாவாணர் தம் புலமை வீறுக்கு மாருகத் தோன்றிற்று. அதனால் அவருக்கே அமைந்த முனைப்புடன் "வேர்ச் சொல் வரிசையைப் பற்றி நீங்கள் மாதிரி கேட்பது வியப்பாயிருக்கிறது. உங்கள் ஐயத்தையும் குறிக்கிறது. அறிஞரை நம்பி அவர்வயின் நல்ல வினையை ஒப்புவிக்கும் திறம் இன்னும் நம்மவர்க்கு ஏற்பட வில்லை" என்று மறுமொழி எழுதினர் (31-7-40.)

கழக ஆட்சியர் புலமையைப் புரிந்துகொண்டிருக்கிறார் பாவாணர். அதனால், மாதிரி கேட்பது அவருக்கு வியப்பு எழுப்பு கிறது; அதனைச் சுட்டுகிறார். தாம் எழுதுவது செவ்விதாய் அமை யும் என்னும் தெளிவு இன்னும் கழக ஆட்சியருக்கு ஏற்பட வில்லையே என்பதால் 'ஐயத்தையும் குறிக்கிறது' என்றார்! அந் நிலையில் தமிழ்மக்கள் — தமிழறிஞர் — தமிழ்ச்செல்வர் — தமிழர சினர் — தமிழ்க்கல்வி நிறுவனங்களின் மேலாண்மையர் ஆயோர் தகவறியாத் தன்மை எரியூட்டுவதாய் அமைகின்றது ஆகலின் "அறிஞரை நம்பி அவர்வயின் நல்லவினையை ஒப்புவிக்கும் திறம் இன்னும் நம்மவர்க்கு ஏற்படவில்லை" என்று நொந்துரைக் கின்றார். இந் நோவு பாவாணர்தம் வாழ்நாள் வரையும் நீடித்து நிலைத்த நோவாகவே அமைந்தது என்பதையும், அத்தீத் திறமே பாவாணர்தம் புலமைத் திறம் அனைத்தும் வெளிப்பட்டு வியன் பயன் விரியுலகங் கொண்டு திளைக்க வாய்க்காமல் செய்தது என் பதையும் அவர்தம் வரலாற்றை அறிந்தோர் நன்கனம் உணர்வர்.

"ஒரே ஒரு சொல்லுக்கு மட்டும் மாதிரி தருகின்றேன்" என்று கடிதத்திலேயே போலிகை வரைகின்ருர் பாவாணர் :

இறு—இறுதல்—வளைதல்,—முடிதல்,—மடிதல்.

சூரியன்—பயிர்கள்—வளைவதையும், பின் முடிவதை அல்லது மடிவதையும், வளைவதையும். முடிவதையும் அது மடிதல் போல்வதையும் நோக்குக.

ஒ. நோ : சாய்தல்—வளைதல், இறத்தல்
சாயுங்காலம் Eve—Evening
சாய்—சா—இறு—இற
முடம்—வளைவு. முட—முடி—மட(ங்கு)—மடி.

இறு+ஐ=இறை—வளைந்த முன்கை
ஒ. நோ : Ellbow

இறு+ஆ=இரு—இருல்—இருட்டு
=வளைந்த கூனி

ஒ. நோ : கூன்+இ=கூனி
குனி—கூன்=வளைவு.

இருல்=தேன்கூடு (வளைந்தது, வட்டமானது)
இருட்டி=எரு (தேன்கூடு போன்றது)
வறட்டி என்றும் சொல்லலாம்.

இறுத்தல்—சூரியன் மேற்கே அடைதல் அல்லது தங்குதல்
இறு+ஐ=இறை. கடவுள், அரசன்
(எங்கும் தங்கியிருப்பவன்)
இறை+அன்—இறையன்
இறுத்தல்=தங்குதல், பாளையமிறங்கல்.
இறுதல்=முடிதல். இறு+உ அல்லது வு—இறவு.
இறுதல்=வளைதல், சாய்தல்
—இறப்பு, இறவாணம், சாய்ந்த தாழ்வாரம்.
இன்னும் விரிப்பிற் பெருகும்.

இறு என்னும் சொல் இற(ங்கு) என்பதினின்றும் பிறந்தது. இறத்தல்—இறங்குதல்.

இற—இறகு—இறங்கு. இற என்பது அண்மையும் கீழ் நிலையும் குறிக்கும். இகரச் சுட்டடியாய்ப் பிறந்தது.

சூரியன் கீழேயிறங்கும்போது வளைவதனால் இறங்கற் கருத்தில் வளைவுக் கருத்தும் முடிவுக் கருத்தும் தோன்றின வென்றறிக.

இங்ஙனம் எத்துணைச் சொற்களுக்கு வேண்டுமானாலும் எழுதலாம். யான் விரிவாயும் விளக்கமாயும் எழுதினால் நீங்கள் உங்கட்கு வேண்டியவாறே சுருக்கிக் கொள்ளலாம்.

29-8-40 இல் "ஒரு பக்கத்திற்குள் 4 வேர்ச் சொற்றிரிபுகள் அடங்குமளவு (25 பக்கம் வருமாறு) 100 முக்கியமான வேர்களைப் பற்றி எழுதியனுப்புவேன்" என்னும் பாவாணர் 'வேள்' பற்றிய வேரைக் குறிக்கிறார்.

(உ - ம்.) வேள் — வேண் (வேண் + அவா = வேணவா)
வேள் + து = வேண்டு
வேள் + வி = வேள்வி
வேள் + கை = வேட்கை
வேள் + தம் = வேட்டம்
வேள் + தை = வேட்டை
வேள் (பெ)
வேள் + ஆண் = வேளாண்
வேள் + ஆண்மை = வேளாண்மை
வேள் + ஆன் = வேளான்
வேள் + ஆளன் = வேளாளன்
வேள் + கோ = வேட்கோ

வேட்டம் + அன் = வேட்டுவன், வேடுவன், வேடன்.

25-9-40 இல், "இறு என்னும் வேர்ச் சொல்லின் இணைப்புகள் சிலவற்றைக் குறிக்கிறார் பாவாணர்:

"வேர்ச் சொற் சுவடியில் இறு என்னும் வேரின் கீழ் இருட்டி = வட்டமான எரு என்பது ஓர் உள்ளிப்புத்தாள். வறட்டி என்ற உலக வழக்குச் சொல், வல் என்னும் வேரடியாயும் வறள் என்னும் பகுதியடியாயும் வந்தது.

வறள் + து = வறட்டு

— பிறவினை; வறட்டி = காயவைத்த எரு. இதைக் குறித்துக் கொள்க.

கீழ் மேல் முதலிய சொற்களுடன் கீழோர், கீழை, கிழக்கத்திய; மேலோர் மேலை மேற்கத்திய முதலிய சொற்களை

வேண்டுமாயின் சேர்த்துக் கொள்ளலாம். இங்ஙனமே பிற பெரு வழக்குச் சொற்களும், வணங்கு என்பதன் கீழ் வாங்கு வளை என்பதையும் சேர்த்துக்கொள்க.

முந்து எழுதி வெளியிட்ட நூலில் பின்னை விடுபாட்டுச் சேர்ப்பும் திருத்தமும் வருதல் வழக்காறு. பாவாணரோ தம் கடிதத்திற்கும் விடுபாட்டுச் சேர்ப்பும் விளக்கமும் திருத்தமும் எழுதுதலை வழக்காருகக் கொண்டார். அவர் நூல்களில் வேர்ச் சொல்லாய்வுகள் மல்கியமை போலவே அவர்தம் கடிதங்களிலும் வேர்ச் சொற் குறிப்புகளும், மொழியியற் சிந்தனைகளும் உண்டு. கலைச் சொல்லாக்கம், மொழிபெயர்ப்பு முதலியவற்றுக்கும் அவர் தம் கடிதங்கள் மிகப் பயனீடாய் அமைந்துள்ளன.

பனிமலைக் கொடுமுடியென வேர்ச் சொல்லாய்வில் மேம் பட்டுத் திகழ்ந்த பாவாணர் அவர்களின், ஆய்வுத் தொடக்கநிலை அறிதல், அடித்தளங் காண விழைவார்க்குப் பயனும் என்னும் கருத்தால் எழுந்தது இக் கட்டுரையாம்.

———

## வலியோனுட்சி வராமல் தடுக்க...?

தனி ஒரு மனிதரை, அவர் எவ்வளவு சிறப்பும் ஆற்றலும் உள்ளவரானுலும், அவரை, கண்மூடிப் போற்றிப் பின்பற்றும் மனப்பான்மை மக்களுக்கு இருத்தல் கூடாது. கண்மூடி வீர வழிபாடு இருந்தால், யாரேனும் ஒருவன் மற்றவர்களை அடக்கி வலியோனுய் விளங்குவது எளிதாகி விடும். "பெரியோரை வியத்தலும் இலமே" என்று சான்ருேரின் நெறியைப் போற்றி, எல்லோரையும் ஏறக்குறைய ஒரு நிகராக மதிக்கும் மனப்பான்மை விளங்கினுல் அந்த நாட்டில் வலியோனுட்சி வராமல் தடுக்க முடியும். அந்த நாட்டில் கூலியாட்களை மாற்றுவதுபோல் அரசியல் தலைவர் களை எளிதில் மாற்றிக்கொள்ளும் முற்போக்கு மக்களுக்கு அமைந்திருக்கும்.

—டாக்டர் மு வரதராசனுர்.

# சங்க நூல்களில் ஞாழல்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

ஞாழல் என்ற மரத்தை நெய்தல் திணைக்குரிய மரமாகச் சங்க நூல்கள் கூறுகின்றன. சங்க நூல்களில் பல பாடல்களிலே இந்த மரம் குறிப்பிடப்படுகின்றது. இந்த மரம் எதுவென்று அறிந்துகொள்வதற்குச் சான்றுகள் பாடல்களில் இருந்தாலும் கண்டுபிடிப்பது எளிதன்று. இம்மரம் எதுவாக இருக்கும் என்று பல ஆண்டுகள் நான் ஆராய்ந்ததில் ஞாழல் இக்காலத்தில் 'கண்ணுடிஇலை' என்று மீனவரும், மற்றையோரும் அழைக்கும் மரமே என்று தெரிகின்றது.

(1) ஒருகுழை ஒருவன்போல் இணர்சேர்ந்த மராஅமும்
பருதிஅம் செல்வன்போல் நனைஊழ்த்த செருந்தியும்
மீன்ஏற்றுக் கொடியோன்போல் மிஞிறுஆர்க்கும் [காஞ்சியும்

ஏனோன்போல் நிறம்கிளர்பு கஞலிய ஞாழலும்
ஆன்ஏற்றுக் கொடியோன்போல் எதிரிய இலவமும்
தீதுதீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோல [ஆங்கு
போதுஅவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றால் இளவேனில் மேதக.

—கலித்தொகை-26-4.

(2) ஊர்க்கால் நிவந்த பொதும்பருள் நீர்க்கால்
கொழுநிழல் ஞாழல் முதிர்இணர் கொண்டு
கழும முடித்து கண்கூடு கூழை
சுவல்மிசைத் தாதொடு தாழ அகல்மதி
தீம்கதிர் விட்டது போல முகன்அமர்ந்து.

—கலித்தொகை-56-2.

(3) தெரியிணர் ஞாழலுந் தேங்கமழ் புன்னையும்
புரியவிழ் பூவின கைதையுஞ் செருந்தியும்
வரிஞிமி றிமிர்ந்தார்ப்ப விருந்தும்பி யியைபூதச்
செருமிகு நேமியான் றார்போலப் பெருங்கடல்
வரிமணல் வாய்சூழும் வயங்குநீர்த் தண்சேர்ப்ப.

—கலித்தொகை-127-1

(4) வாணிலா வேய்க்கும் வயக்கொளி யெக்கர்மே
லாணுப் பரிய வலவ னளைபுகூஉங்

கானற் கமழ்ஞாழல் வீயேய்ப்பத் தோழியென்
மேனி சிதைத்தான் றுறை. —கலித்தொகை-131-19.

(5) மயில்கொல்? மடவான்கொல்? மாநீர்த் திரையுள்
பயில்வதோர் தெய்வம்கொல்? கேளீர்!—குயில் பயிரும்
கன்னி இளஞாழல் பூம்பொழில் நோக்கிய
கண்ணின் வருந்தும்என் நெஞ்சு.

—திணைமொழி ஐம்பது-49-3

(6) தந்தார்க்கே ஆமால் தடமென்தோள்—இன்னநாள்
வந்தார்க்கே ஆம்என்பார் வாய்காண்பாம்;—வந்தார்க்கே
காவா இளமணல் தண்கழிக் கானல்வாய்ப்
பூவா இளஞாழல் போது.

—திணைமாலை நூற்றைம்பது-39-4

(7) கடும் புலால் புன்னை கடியும் துறைவ!
படும்புலால் புள்கடிவான் புக்க, தடம்புல்ஆம்
தாழை,மா ஞாழல், ததைந்து உயர்ந்த தாழ்பொழில்,
ஏழைமான் நோக்கி இடம்.

—திணைமாலை நூற்றைம்பது-44-3

(8) மாயவனும் தம்முனும் போலே, மறிகடலும்
கானலும்சேர் வெண்மணலும் காணாயோ—கானல்
இடைஎலாம் ஞாழலும் தாழையும்; ஆர்ந்த
புடைஎலாம் புன்னை புகன்று?

—திணைமாலை நூற்றைம்பது-58-3

(9) வறள் அடும்பின் இவர் பகன்றைத்
தளிர்ப் புன்கின் தாழ் காவின்
நனை ஞாழலொடு மரம் குழீஇய
அவண் முனையின் அகன்று மாறி.

—பொருநராற்றுப்படை-வரிகள் 193 — 198

(10) தாழை, தளவம், முள்தாள் தாமரை
ஞாழல், மௌவல், நறுந்தண் கொகுடி,

—குறிஞ்சிப்பாட்டு-வரிகள் 80, 81

(11) ஒளிதிகழ் உத்தி உருகெழு நாகம்
அகரு, வழை, ஞெமை, ஆரம், இனைய
தகரமும், ஞாழலும், தாரமும், தாங்கி
நளிகடல் முன்னியது போலும், தீம்நீர்
வளிவரல் வையை வரவு. —பரிபாடல்-12

(12) இணர்ததை ஞாழல் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத் தன்ன மாஇதழ் நெய்தற்
பாசடைப் பனிக்கழி துழைஇ, புன்னை
வால்இணர்ப் படுசினைக் குருகுஇறை கொள்ளும்.

—பதிற்றுப்பத்து-30

(13) துளங்குநீர் வியலகம் கலங்கக் கால்பொர,
விளங்குஇரும் புணரி உரும்என முழங்கும்
கடல்சேர் கானற் குடபுலம் முன்னி
கூவல் துழந்த தடந்தாள் நாரை
குவி இணர் ஞாழல் மாச்சினைச் சேக்கும்.

—பதிற்றுப்பத்து-51

(14) பொரியரை ஞாழலும் புன்னையும் பூத்து
வரிதரு வண்டொடு தேனின மார்க்கும்
திருவிரி பூம்பொழிற் செவ்வனஞ் சேர்ந்தாங்
கருவரை மார்ப னவலித் திருந்தான்.

—சீவக சிந்தாமணி-515

(15) விரைமர முருட்டுந் திரையுலாப் பரப்பின்
ஞாழ லோங்கிய தாழ்கண் ணகம்பின்
ஆம்பலுங் குவளையுந் தாம்புணர்ந்து மயங்கி
வண்டுண மலர்ந்த குண்டுநீ ரிலஞ்சி
மூடக்காற் புன்னையு மடற்பூந் தாழையும்.

—மணிமேகலை-8-6.

(16) ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்
செவ்வீ மருதின் செம்மலொடு தாஅய்த்
துறையணிந் தன்றவ ரூரே யிறையிறந்
திலங்குவளை நெகிழச் சாஅய்ப்
புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே.

—குறுந்தொகை-50-1

(17)　　　　　　　　　　இவளே,
நின்சொற் கொண்ட வன்சொற் றேறிப்
பசுநனை ஞாழற் பல்சினை யொருசிறைப்
புதுநல னிழந்த புலம்புமா ருடையள்
உதுக்காண் டெய்ய வுள்ளல் வேண்டும்.

—குறுந்தொகை-81-2

(18) இன்னு முளெனே தோழி யிந்நில
தண்ணிய கமழு ஞாழற்
றண்ணந் துறைவர்க் குரைக்குநர்ப் பெறினே.

—குறுந்தொகை-310-6

(19) எறிசுறுக் கலித்த விலங்குநீர்ப் பரப்பின்
நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்
வெறியயர் களத்தினிற் றோன்றுந் துறைவன்
குறியா னாயினுங் குறிப்பினும் பிறிதொன்.

—குறுந்தொகை-318-2

(20) சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதையப் புணரி
குணில்வாய் முரசி னிரங்குந் துறைவன்
நல்கிய நாடவச் சிலவே யலரே. —குறுந்தொகை-328-1

(21) நனைமுதிர் ஞாழற் சினைமரு டிரள்வீ
நெய்தன் மாமலர்ப் பெய்தல் போல
வூதை தூற்று முரவுநீர்ச் சேர்ப்ப
தாயுடன் றலைக்குங் காலையும் வாய்விட்.

—குறுந்தொகை-397-1

(22) செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி
ஞாழ லோங்குசினைத் தொடுத்த கொடுங்கழித்
தாழை வீழ்கயிற் றூச றூங்கிக்
கொண்ட விடுமணற் குரவை முனையின்.

— அகம்-20-வரி-5

(23) பலருமாங் கறிந்தனர் மன்னே யினியே
வதுவை கூடிய பின்றைப் புதுவது
பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்குங்
கானலம் பெருந்துறைக் கழனி மாநீர்ப்.

—அகம்-70-வரி-9

(24) புலவுநா றிருங்கழி துழைஇப் பலவுடன்
புள்ளிறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத்
தாழை மணந்து ஞாழலொடு கெழீஇப்
படப்பை நின்ற முடத்தாட் புன்னைப்
பொன்னேர் நுண்டாது நோக்கி
யென்னு நோக்குமிவ் வழுங்க லூரே.

—அகம்-180-வரி-12

(25) தண்டுறை யூரன் பெண்டி ரெம்மைப்
பெட்டாங்கு மொழிப வென்ப வவ்வலர்ப்
பட்டன மாயி னினியெவ னாகியர்
கடலாடு மகளிர் கொய்த ஞாழலுங்
கழனி யுழவர் குற்ற குவளையும். —அகம்-216-வரி-8

(26) செவ்வீ ஞாழற் கருங்கோட் டிருஞ்சினைத்
தனிப்பார்ப் புள்ளிய தண்பறை நாரை
மணிப்பூ நெய்தன் மாக்கழி நிவப்ப
வினிப்புலம் பின்றே கானலு நளிகடல்.

—அகம்-240-வரி-1

(27) இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்
புலாஅன் மறுகிற் சிறுகுடிப் பாக்கத்
தினமீன் வேட்டுவர் ஞாழலொடு மிலேயு
மெல்லம் புலம்ப நெகிழ்ந்த தோளே.

—அகம்-270-வரி-3

(28) செல்ல லென்றலு மாற்ருய் செலினே
வாழலெ னென்றி யாயின் ஞாழல்
வண்டுபடத் ததைந்த கண்ணிய நெய்தற்
றண்ணரும் பைந்தார் துயல்வர வந்திக்.

—அகம்-370-வரி-9

(29) அன்னே வாழிவேண் டன்னே புன்னேயொடு
ஞாழல் பூக்குந் தண்ணந் துறைவன்
இவட்கமைந் தனெனுற் ருனே
தனக்கமைந் தன்றிவண் மாமைக் கவினே.

—ஐங்குறுநூறு-103-2

(30) எக்கர் ஞாழல் செருந்தியொடு கமழத்
துவலேத் தண்டுளி வீசிப்
பயலே செய்தன பனிபடு துறையே.

—ஐங்குறுநூறு-141-1

(31) எக்கர் ஞாழ லிறங்கிணர்ப் படுசினேப்
புள்ளிறை கூருந் துறைவனே
உள்ளேன் ருேழி படீஇயரென் கண்ணே.

—ஐங்குறுநூறு-142-1

(32) எக்கர் ஞாழற் புள்ளிமி ழகன்றுறை
இனிய செய்து நின்றுபின்
முனிவு செய்தவிவ டடமென் ருேளே.

—ஐங்குறுநூறு-143-1

(33) எக்கர் ஞாழ லிணர்படு பொதும்பர்த்
தனிக்குரு குறங்குந் துறைவற்
கினிப்பசந் தன்றென் மாமைக் கவினே.

—ஐங்குறுநூறு-144-1

(34) எக்கர் ஞாழற் சிறியிலைப் பெருஞ்சினை
ஓதம் வாங்குந் துறைவன்
மாயோள் பசலை நீக்கின னினியே.

—ஐங்குறுநூறு-145-1

(35) எக்கர் ஞாழ லரும்புமுதி ரவிழிணர்
நறிய கமழுந் துறைவற்
கினிய மன்றவென் மாமைக் கவினே.

—ஐங்குறுநூறு-146-1

(36) எக்கர் ஞாழன் மலரின் மகளிர்
ஒண்டழை யயருந் துறைவன்
தண்டழை விலையென நல்கின னாடே.

—ஐங்குறுநூறு-147-1

(37) எக்கர் ஞாழ லிகந்துபடு பெருஞ்சினை
வீயினிது கமழுந் துறைவனை
நீயினிது முயங்குமதி காத லோயே.

—ஐங்குறுநூறு-148-1

(38) எக்கர் ஞாழற் பூவி னன்ன
சுணங்குவன ரிளமுலை மடந்தைக்
கணங்குவளர்த் தகறல் வல்லா நீமோ.

—ஐங்குறுநூறு-149-1

(39) எக்கர் ஞாழ னறுமலர்ப் பெருஞ்சினைப்
புணரி திரைக்குந் துறைவன்
புணர்வி னின்னா னரும்புணர் வினனே.

—ஐங்குறுநூறு-150-1

(40) பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
பொன்னிணர் ஞாழன் முனையிற் பொதியவிழ்
புன்னையம் பூஞ்சினைச் சேக்குந் துறைவன்
நெஞ்சத் துண்மை யறிந்தும்
என்செயப் பசக்குந் தோழியென் கண்ணே.

—ஐங்குறுநூறு-169-2

(41) கடற்கோடு செறிந்த வளைவார் முன்கைக்
கழிப்பூத் தொடர்ந்த விரும்பல் கூந்தல்
கானன் ஞாழற் கவின்பெறு தழையள்
வரையர மகளிரி னரியளென்
நிறையரு நெஞ்சங் கொண்டொளித் தோளே.

—ஐங்குறுநூறு-191-3

(42) பாயிரும் பனிக்கழி துழைஇப் பைங்காற்
றன்வீழ் பெடைக்குப் பயிரிடூஉச் சுரக்குஞ்
சிறுவீ ஞாழற் றுறையுமா ரினிதே
பெரும்புலம் புற்ற நெஞ்சமொடு பலநினைந்து.

—நற்றிணை-31-5

(43) இற்றெங் குணர வுரைமதி தழையோர்
கொய்குழை யரும்பிய குமரிஞாழல்
தெண்டிரை மணிப்புறந் தைவருங்
கண்டல் வேலிநுந் துறைகிழ வோற்கே.

—நற்றிணை-54-9

(44) திறையைப் பெய்த அம்பி காழோர்
சிறையருங் களிற்றிற் பரதவர் ஒய்யுஞ்
சிறுவீ ஞாழற் பெருங்கடற் சேர்ப்பனை
ஏதி லாளனும் என்ப போதவிழ். —நற்றிணை-74-5

(45) இதுவே, நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்ப்
புன்னை தகைத்த வெண்மண லொருசிறைப்
புதுவது புணர்ந்த பொழிலே உதுவே
பொம்மற் படுதிரை நம்மோ டாடிப். —நற்றிணை-96-1

(46) மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள் நறுமலர்
ஞாழல் அஞ்சினைத் தாழிணர் கொழுதி
முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்
அறிவஞ் சுறுவி யாய்மட நிலையே. —நற்றிணை-106-7

(47) தின்வாய்ப் பணிமொழி கனையா பன்மாண்
புதுவீ ஞாழலொடு புன்னை தாஅம்
மணங்கமழ் கானல் மாணல மிழந்த
இறையே ரெல்வளைக் குறுமகள். —நற்றிணை-167-8

(48) சிறுவீ ஞாழற் றேன்தோ யொள்ளிணர்
நேரிழை மகளிர் வார்மணல் இழைத்த
வண்டற் பாவை வனமுலை முற்றத்து
ஒண்பொறிச் சுணங்கின் ஐதுபடத் தாஅம்.

—நற்றிணை-191-1

(49) இலங்கெயிற் றேஎ ரின்னகை மகளிர்
உணங்குதினை துழவுங் கைபோல் ஞாழல்
மணங்கமழ் நறுவீ வரிக்குந் துறைவன்
தன்னொடு புணர்த்த வின்னமர் கானல்.

—நற்றிணை-267-4

(50) அழியா மரபின்நம் மூதூர் நன்றே
கொழுமீன் சுடுபுகை மறுகினுள் மயங்கிச்
சிறுவீ ஞாழற் றுறையுமா ரினிதே
ஒன்றே தோழிநங் கானலது பழியே —நற்றிணை-311-7

(51) புல்லுடைக் காவிற் றெழில்விட் டாங்கு
நறுவிரை நன்பகை கொடாஅர் சிறுவீ
ஞாழலொடு கெழீஇய புன்னையங் கொழுநிழல்
முழவுமுதற் பிணிக்குந் துறைவ நன்றும்.
—நற்றிணை-315-7

(தொடரும்)

---

## முனைகளில் நிற்றல் நன்றே!

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.]

இன்தமிழ் நாட்டி லின்று
எழுத்தினை விற்போ ரெல்லாம்
நன்மைகள் காண வேண்டில்
நவிலுமென் சொற்கள் கேட்பீர்!
பன்முறை இலக்க ணங்கள்
பழந்தமிழ் இலக்கி யங்கள்
திண்மையாய் நாளும் ஆய்ந்தே
திறமுடன் தெளிவுங் கொள்வீர்!
இலக்கியச் செறிவு மின்றி
இலக்கணத் தெளிவு மின்றிக்
கலப்பட மொழியில் பொல்லாக்
கவிதைகள் கதைகள் தம்மை
மளமள வென்றே தீட்டி
மிகுபொருள் குவிக்கும் செய்கை
வளமுடை மொழியை, நாட்டை
வாட்டிடும் செய்கை யன்றோ!
நெடுங்கணக் கறிவே போதும்
நீள்கதை பாடற் கென்றே
அடுக்கடுக் காகத் தாளில்
அளவின்றிக் கிறுக்கி நாளும்
அடுக்காத வகையில் செல்வம்
அடுக்கிட எண்ணு வீரேல்
மடிதனை விரித்துச் சந்தின்
முனைகளில் நிற்றல் நன்றே.

# சத்துணவுப் பத்து

[ முதுபெரும் புலவர் மு. ரா. பெருமாள் முதலியார் ]

( வெண்பா )

1. சோறும் கறியும் சுடச்சுடப் பிள்ளைகட்குச்
சாறும் கலந்துணவு தந்துமிகச்—சிறுபசி
ஆற்றும் பணியினை ஆற்றுகின்ற எம்ஜியார்
ஏற்றம் பெறுகின்றார் இங்கு.

2. உணவே மருந்தென் றுரைத்தார் உயர்சத்
துணவருந்த ஓடும் பிணியென்—றுணர்ந்தே
அறுசுவை உண்டி அளிக்கமுன் வந்தார்
சிறுவர்க் கெல்லாம்எம் ஜியார்.

3. பலலட்சம் பிள்ளைகட்குப் பாங்காய் உணவை
இலவசமாய்த் தந்துதவும் ஏந்தல்—பலசாதி
மக்களும் சேர்ந்துண்ணும் மாட்சியினைக் கண்டுமனம்
எக்களித்து நிற்கின்றார் இன்று.

4. பசிப்பிணி தீர்த்த மருத்துவன் பண்ணன்
இசைபாடி ஏத்தினார் அன்று—பசியின்றி
உண்ணுவோர் சத்துணவால் உண்டாகும் நன்மையினை
எண்ணிடவும் வல்லாரோ இன்று ?

5. காய்ந்த வயிற்றிற்குக் கஞ்சி கிடைத்தாலும்
ஆய்ந்திடில் அஃதே அமிழ்தாகும்—வாய்ந்தபுகழ்
எம்ஜியார் பிள்ளைகட் கின்சுவை உண்டிதரல்
நெஞ்சினின்று நீங்குமோ தான்.

6. கூழும் கிடைக்காமல் கொல்பசியால் துன்புற்று
வாழும் சிறாரின் மனவருத்தம்—ஆழமாய்த்
தொட்டதால் எம்ஜியார் தொண்டுளத்தில் சத்துணவுத்
திட்டம் பிறந்ததென்று தேர்.

7. வாட்டும் பசியால் வருந்தும் சிறுவர்க்குப்
பாட்டும் படிப்பும் பயன்தாரா—நாட்டம்
வயிற்றில் இருப்பதால் சத்துணவின் மாட்சி
பயிற்சிக்கும் பக்க பலம்.

8. சோர்வும் பசியுமுண்ட சோற்ருல் அகன்றபின்
ஆர்வம் மிகப்பெறுவர் அல்லரோ—பார்வை
ஒளிவீசும் பாடம் உளத்தில் பதியும்
களிப்புடனே கற்பர் சிருர்.

9. மண்டு பசியால் வருந்தும் குழந்தைகளைக்
கண்டுமனம் நொந்து கசிந்துருகித்—தொண்டுகள்
அத்தனைக்கும் மேலென் றறிந்ததால் கொண்டுவந்தார்
சத்துணவுத் திட்டந் தனை.

10. எம்ஜியார் என்ருலே ஏழைகளின் நண்பரென
நெஞ்சம் நெகிழ்வர்நன் னீர்மையினர்—நெஞ்சமே
சத்துணவு தந்துசிருர் தம்மைப் புரக்குமந்த
உத்தமர் பேரைநீ ஓது.

———

## உரையாசிரியர்கள் செய்த பிழை

ஆரியர் தம்மைப் பிராமணர் எனவும், ஆரியரல்லாத தமிழரைச் சத்திரிய வைசிய சூத்திரரெனவும் வகுத்த நால்வேறு வகுப்பையுங் கூட ஒழித்துத் தமிழர் எல்லாரையும் ஒருங்கு சேர்த்துச் சூத்திரரென முற்றும் இகழ்வாகவே வழங்குவதற்குத் துணிந்து, 'கலிகாலத்தில் சத்திரிய வைசிய வகுப்பில்லை, பிராமணரல்லாத அனைவருஞ் சூத்திரரே ஆவர்' என ஒருகதை புனைந்து கட்டி, அதனைத் தாம் இயற்றிய சில நூல்களிடையே நுழைத்துவிட்டு, அதனையுந் தமிழர் எல்லாரும் எளிதிலே நம்பும்படி செய்து, தமது கருத்தை நிறைவேற்றிக்கொண்டார்கள். இங்ஙனம் இவர்கள் கருத்து நிறைவேறிய பிற்காலத்திற் ருேன்றிய உரையாசியர்களான இளம்பூரணர், பேராசிரியர், நச்சினூர்க்கினியர் முதலியோர், ஆரியப் பார்ப்பனர் வழக்கத்திற் கொணர்ந்த இவ் விகழ்ச்சிப் பொய்யுரையை மெய்யென நம்பித், தாம் உரை எழுதுதற்கு எடுத்துக்கொண்ட 'தொல்காப்பியம்' முதலான பழைய செந்தமிழ்த் தனி நூல்களில் வேளாளரைப்பற்றிக் கூறுமிடங்களிலெல்லாம் பிழையான உரைகளை எழுதிவிடலானுர்கள். இவ் விந்திய நாட்டிற் சரித்திர நூல்களும், அவற்றின் வழியே மெய் இது, பொய் இதுவெனப் பகுத்துக் காணுஞ் சரித்திர வுணர்வும் இல்லாமையால், ஆரியப் பார்ப்பனர் தமிழ் நன்மக்களைத் தாழ்த்துதற்குச் செய்த இச் சூழ்ச்சிகளை அறியாமல், அவையெல்லாங் கடவுள் வகுத்த ஏற்பாடெனவே நம்பி அவற்றுக்கு மாருக ஏதுங் கூறமாட்டாராய், நூலாசிரியர் கருத்துக்கு முரணுக அவர்கள் அங்ஙனம் பிழைபட்ட உரைகள் எழுதியது ஒரு வியப்பன் றென்க.

மறைமலையடிகள்

(வேளாளர் நாகரிகம், பக்கம் 80)

# கோச்செங்கணான் யார்?

[ டாக்டர் இரா. கலைக்கோவன், M.B.B.S.. D.O. ]

(முன்னிதழ் ௩௯ஆம் பக்கத் தொடர்ச்சி)

"செங்கட் பெயர் கொண்டவன் செம்பியர்கோன்
அங்கட்கரு ணைபெரி தாயவனே
வெங்கண்விடை யாயெம் வெணாவலுளாய்
அங்கத்தயர் வாயினள் ஆயிழையே", [64]

என்ற சம்பந்தரின் வரிகள் திருஆனைக்கா கோயிலை எடுப்பித்தவன் சோழன் கோச்செங்கணானே என்பதை எடுத்துரைக்கின்றன.

"கோடுயர் வெங்களிற்றுத் திகழ் கோச்செங்க ணான்செய்கோயில்
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே", [65]

என்ற சுந்தரர் பாடல் மூலம் நன்னிலத்துப் பெருங்கோயிலை எழுப்பியதும் கோச்செங்கணானே என்றறிகிறோம்.

அப்பர், சம்பந்தர், சுந்தரரால் பாடப்பெறும் மாடக் கோயில்கள் அல்லது பெருந்திருக்கோயில்கள் பலவாகும். எழுபத்தெட்டு பெருந்திருக் கோயில்கள் இருந்ததாகப் பாடும் அப்பர் அடிகள் அவற்றைக் கட்டியவர் யாரென்று குறித்தாரில்லை. எத்தனையோ திருப்பதிகளைப் பாடிப்பரவிய சம்பந்தரும் திரு அம்பர்ப் பெருந்திருக்கோயில், திருவைகன்மாடக்கோயில், திருவானைக்கோயில், திருமுக்கீச்சரம் போன்ற மிகச்சில கோயில்களையே கோச்செங்கணான் எடுப்பித்தவையாகக் குறிப்பிடுகின்றார். சுந்தரரோ நன்னிலத்துப் பெருங்கோயிலைப் பாடும்போது மட்டுமே, அக்கோயிலை எடுப்பித்ததாகக் கோச்செங்கணானைக் குறிப்பிடுகின்றார். இவற்றையெல்லாம் நோக்க, கோச்செங்கணான் கோயில்கள் எடுப்பித்தது உண்மையென்றும், அவை அதுவரை நடைமுறையில் இல்லாத புதியதோர் அமைப்பில் அமைக்கப் பட்டமையின், 'மாடக் கோயில்கள்' என்று வழங்கப்பட்டன என்பதும், அக்கோயில்கள் திருமாலுக்கும் சிவனுக்குமாய் எழுப்பப் பட்டன என்பதும் பெறப்படும்.

---

64. இரண்டாம் திருமுறை—தருமபுர ஆதீனப் பதிப்பு, திருவானைக்கா, பக். 104.

65. ஏழாம் திருமுறை—தருமபுர ஆதீனப் பதிப்பு, திருநன்னிலத்துப் பெருங்கோயில், பக். 798.

கோச்செங்கட்சோழன் வாழ்ந்த காலம் சமணமும் பௌத்தமும் தமிழகத்தில் வலியோங்கிய காலமாகும். தமிழர் சமயங்களான சைவத்தையும் வைணவத்தையும் காக்கவேண்டிய பொறுப்பில் சோழமன்னன் இருந்தமையால், சோழர் தொல்குடிக்கே உரிய கலையார்வமும், பேராற்றலும், பெருமிதப்போக்கும் அப்பெருமானைத் திருமாலுக்கும் சிவனுக்குமாய் மாடக்கோயில்களை எழுப்பவைத்தன எனலாம். திருநறையூர் மாடக்கோயில், திருநாங்கூர் மாடக்கோயில், அழகிய மணவாளப் பெருமாள் கோயில் முதலிய பெருமாள் ஆலயங்கள் கோச்செங்கணுனல் கட்டப் பட்டவையே.

சங்ககாலத்துக் கோயில்களின் அமைப்புமுறையிலிருந்து கோச்செங்கணுன் கோயில் அமைப்பு முறைகள் மாறுபட்டன. இப் புதுமையான அமைப்புமுறையில் செய்யப்பட்ட கோயில்கள் மாடக்கோயில்கள் எனப்பட்டன. கருவறை கீழ்தளத்தில் இல்லாமல் மேல்தளத்தில் அமைக்கப்பட்டது.[66] படிக்கட்டுகள் அமைத்துச் செய்குன்றுபோல் கட்டப்பட்டதால், இவை யானை ஏறமுடியாத நிலையில் அமைக்கப்பட்டன என்ற கதை தோன்ற வாய்ப்பானது. மாடக்கோயில் என்பது கோயில் கட்டடக் கலை வளர்ச்சியில் ஒரு படி. ஆனுல் பின்வந்தோர் அதற்கும் ஒரு சிலந்திக் கதையைச் சிறப்பாகவே செய்துவைத்தனர். செங்கணுன் சிலந்திச்சோழன் என்றும் அழைக்கப்பட்டான். அப்பர் அடிகளும் திருஞானசம்பந்தரும் தங்கள் பதிகங்களில் பல இடங்களில் இச் சிலந்திக் கதையைக் குறிப்பிடுகிருர்கள். ஏனைய புராணக் கதைகளைப் போலவே இக் கதையும் வரலாற்று அடிப்படைகள் இல்லாத கதையாகும்.

இனி, கோச்செங்கணுன் சிவனடியாரா அல்லது திருமால் அடியாரா என்பதுபற்றிக் காண்போம்.

கோச்செங்கணுனைச் சிவனடியாராக்கிய பெருமைக்குரியவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். அப்பெருமான் தம்முடைய திருத்தொண்டத் தொகையில்,

"தென்னவனுய் உலகாண்ட செங்கணுற் கடியேன்,"[67]

என்று அடியார்களுள் ஒருவராகச் செங்கணுனை வைத்துப் போற்றுகிருர். இத் திருத்தொண்டத் தொகையைப் பின்பற்றி எழுந்த திருத்தொண்டர் திருவந்தாதியில்,

---

66. தமிழகக் கோயிற் கலைகள்,—டாக்டர். இரா நாகசாமி, பக். 30.

67. திருத்தொண்டத் தொகை (ஏழாம் திருமுறை), பக்.313.

"மைவைத்த கண்டன் நெறியன்றி
மற்றோர் நெறி கருதாத்
தெய்வக் குடிச் சோழன்",[68]

என்று நம்பியாண்டார் நம்பி இன்னும் ஒருபடி மேலே போய், கோச்செங்கணனைச் சைவம் தவிர வேறு சமயநெறி கருதாத் தொண்டனாக வரைந்து காட்டுகிறார்.

இவ்விரண்டு நூல்களையும் அடியொற்றி எழுந்த திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் பெருமான் கோச்செங்கணனின் சிலந்திக்கதையோடு, அம் மன்னன் பிறந்த கதை, அவன் பெற்றோர் பெயர்கள் முதலியவையும் கூறுகின்றார். கோச்செங்கணனின் தந்தையைச் சுபதேவர் என்றும் தாயார் கமலவதி என்றும், அப்பெருமாட்டி, தன் குழந்தை சிறிது நேரம் கழித்துப் பிறந்தால் உலகாளும் என்று சோதிடர்கள் கூறியதால் தன்னைத் தலைகீழாகக் கட்டித் தொங்கவிடச்செய்து, பிள்ளைப்பிறப்பைத் தள்ளிப் போட்டதாகவும், காலங்கடந்து பிறந்தமையால் கண்கள் சிவந்திருக்கக் கண்ட தாய், 'என் கோச்செங்கண்ணனோ' என்று கேட்டதாகவும் சோழரின் பிறப்புக்கதை கூறப்படுகின்றது.

"... ... பொருந்தும் பெருந்தண் சிவாலயங்கள்
காதலோடும் பலவெடுக்கும் தொண்டு புரியும் கடம் பூண்டார்"[69]

"ஆனைக் காவிற் றாமுன்னம் அருள்பெற் றதனை யறிந்தங்கு
மானைத் தரித்த திருக்கரத்தார் மகிழும் கோயில் செய்கின்றார்" [70]

"அந்தமில்சீர்ச் சோணாட்டில் அகனாடு தொறுமணியார்
சந்திரசே கரனமருந் தானங்கள் பலசமைத்தார்," [71]

என்ற சேக்கிழாரின் வரிகள், கோச்செங்கட் சோழன் திருவானைக்கா கோயிலை எடுப்பித்த செய்தியையும், சிவபெருமானுக்காகப் பல கோயில்கள் எடுப்பித்தமையையும் தெரிவிக்கின்றன.

இக் கோச்செங்கட்சோழ நாயனார் புராணத்திலிருந்து மூன்று முதன்மையான செய்திகள் பெறப்படுகின்றன. அவர் சுபதேவச் சோழருக்கும் கமலவதி தாயாருக்கும் பிறந்தவரென்பது ஒன்று. அவரது முற்பிறப்புச் சிலந்திக்கதை மற்றொன்று. அவர் திருவானைக்கா கோயிலையும் மற்றும்பல

68. திருத்தொண்டர் திருவந்தாதி, குமரகுருபரன் சங்கப் பதிப்பு, பக். 362, செய்யுள் எண். 81.

69, 70. திருத்தொண்டர் புராணம்-திரு C. K. சுப்பிரமணியனார் உரை, பக், 550.

71. திருத்தொண்டர் புராணம் - திரு. C. K. சுப்பிரமணியனார் உரை, பக். 552.

ஆலயங்களையும் எழுப்பியது மூன்றாவது செய்தி. இவற்றை ஒவ்வொன்றாகக் காண்போம்:

கோச்செங்கணானின் காலம் ஏறத்தாழ கி. பி. 400—600. சேக்கிழார் பெருமானின் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு. ஏறத்தாழ ஏழு நூற்றாண்டுகளுக்குப் பிறகு செய்யப்பட்ட திருத்தொண்டர் புராணத்தில்தான் கோச் செங்கணானின் பிறப்புக்கதை முதன்முதலாகச் சொல்லப்படு கிறது. ஏழு, எட்டாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்து, இச் சோழ வேந்தனைப் பாடிய சம்பந்தர், அப்பர், திருமங்கையாழ்வார், ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்து இவ் வேந்தனைப் பாடிய சுந்தரர், அவருக்குப் பின் வந்த நம்பியாண்டார் நம்பி என்போர் கூறாத இப்பிறப்புக்கதை சேக்கிழார் பெருமானுக்கு எங்கிருந்து கிடைத்திருக்க முடியும்? கல்வெட்டுச் செய்திகளில் கூட கோச் செங்கணானைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளைக் காணமுடிய வில்லை. முன்னோர்களில் ஒருவனாக அப்பெருமான் அன்பில் செப்பேடுகளில் குறிக்கப்படுவதோடு சரி. கோச்செங்கணான் காலத்தில் கோயில்கள் மரத்தாலும் செங்கல்லாலும் கட்டப்பட்ட மையால், அவன் காலத்துச் செய்திகள் கோயில்களில் அதிக அளவில் இடம்பெற்றிருக்க வழியில்லை. வேறெந்த அகச்சான்றும் புறச்சான்றும் இல்லாத நிலையில் புதிதாக ஒரு பிறப்புக்கதை கற்பனையிலன்றி வேறு எங்கிருந்து தோன்றியிருக்க இயலும்!

ஒரு வாதத்துக்கு இக்கதை உண்மையென்றே கொள்வோ மாயின், கோச்செங்கணான் சங்ககாலத்திற்குப் பிற்பட்டு வாழ்ந்தவன் என்பதற்கு இக்கதையே தக்க சான்றாகிவிடும். சுபதேவர், கமலவதி என்ற பெயர்கள் முழுமையும் வடமொழிப் பெயர்களாக இருக்கின்றன. சங்கச் சோழர்களின் பெயர்களோ, தூய தமிழ்ப் பெயர்கள். கிள்ளி, வளவன், சென்னி என்று அழகிய தமிழ்ப் பெயர்களுடன் வாழ்ந்த தமிழ் மன்னர்களிடையே சுபதேவன் திடீரெனத் தோன்றியிருக்க முடியாது. வடமொழி யாளர் கலப்பு மிகுதியும் தமிழகத்தில் தோன்றிய காலம் கி. பி. 300க்குப் பிறகே என்று வரலாற்று அறிஞர்கள் கருதுகிறார்கள். ஏறத்தாழ கி. பி. 400—600க்குள் வாழ்ந்த காரைக்கால் அம்மை யார் பெயர் புனிதவதி என்பது இங்கு நினைக்கத்தக்கது. இப்படி வடமொழிப் பெயர்கள் சூட்டிக்கொள்வது பிற்காலத்துப் பழக்க மாய் மலர்ந்ததே தவிர, சங்ககாலத்தில் இப்படி இருந்தமைக்குச் சங்க இலக்கியங்களில் போதிய சான்றுகள் இல்லை.[7அ] எனவே இக்கதையை உண்மை யென்று ஏற்பின் அதுவும் கோச்செங் கணான் காலம் கி. பி. 400—600க்கு இடைப்பட்டதென்பதை உறுதி செய்யும்.

(தொடரும்)

# இராச ராச சேதுபதி பாடிய திருக்குறள் வெண்பா

( க. சி. கமலையா )

**செந்தமிழ்ச் சேதுபதி**

"கோதிலாத செந்தமிழ்க்கடல் குளித்தகங்குளிரும்
சேது காவலர்"

செந்தமிழ்க் காவலராயும் விளங்கினர். தமிழ் வளர்ச்சியில் ஆர்வம் காட்டியவர் முத்துராமலிங்க சேதுபதி என்ற இராச ராசேசுவர சேதுபதி ஆவார். இவர் 3-6 1889ஆம் நாள் பிறந்தார். மதுரைச் சேதுபதி உயர்நிலைப் பள்ளியிலும், மதுரைக் கல்லூரியிலும் கல்வி பயின்றார். மகாவித்துவான் ரா. இராகவையங்காரிடம் தமிழிலக்கிய நூல்களைக் கற்றார். கர்ஸான் பிரபு தில்லியில் நடத்திய கொலுவிருக்கை விழாவுக்குத் தந்தைபாஸ்கர சேதுபதியுடன் சென்றார். தில்லியில் 1911ஆம் ஆண்டு நடைபெற்ற ஆங்கில அரசர்-அரசியர் முடிசூட்டு விழாவிற்கு, சென்னை அரசாங்கத்தினால் அழைக்கப்பட்ட விருந்தினரும் ஆவார் இவர். இந்து அறநிலையச் சட்டம் இயற்றுங்கால் சட்ட மன்ற நடவடிக்கைகளில் கலந்துகொண்டு அதிலடங்கிய தலையாய கொள்கைகளை இராச ராசேசுவர சேதுபதி ஆதரித்தார். 4-8-1928ஆம் நாள் இவர் காலமானார்.

**மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர் :**

1913ஆம் ஆண்டு திசம்பர் 12ஆம் நாள் இராச ராசேசுவர சேதுபதி மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் தலைவரானார்.

நாவலர் தமக்கும், நன்மொழி புணர்க்கும்
பாவலர் தமக்கும் பதக்கமும், கடகமும்
போர்வையும் பட்டும் பொன்னும் பிறவும்
வரிசையா னேக்கிப் பரிசளித் தவப்போன்

என்று 'செந்தமிழ்' பாடுகிறது.

தமிழவட் புரக்கும் நாவில் நல்லிசை
இமிழ்கடல் வரைப்பில் எங்கணும் பரப்பும்
காமரு சிறப்பின் தோமில் சீரோய்!
தமிழர் சிறக்கவும் தமிழ்ப்பயிர் தழைக்கவும்
கொண்டநின் எண்ணம் குறைவில தாகுக!
வாழிய பெரும! வாழிய பெரும!!
வாழி வாழி வாழிய சிறந்தே!!!

என்று கரந்தைத் தமிழ்ச் சங்கம் அவர்மீது வாழ்த்துக் கவி பாடியது.

சேதுநன் னட்டையும் செந்தமிழ் மொழியையும்
பாது காக்கும் பாக்கியம் பெறுதலால்
ஒத்தி ராதபூ மடந்தையர் ஒத்துறை
முத்து ராம லிங்கப் பேரோய்

என்று வாழ்த்தினர் வே. முத்துசாமி ஐயர்.

நடுக்காவேரி மு. வேங்கடசாமி நாட்டார் பாடிய புறநிலை வாழ்த்து சங்கத்துச் சான்றோர் பாடல் போன்ற சிறப்புடையது:

பாவலர் தொடுக்கும் பாவல ரலங்கல்
பூவலர் முல்லைத் தொடையொடும் புனைந்து
பொன்மலை யெனவெழூஉம் வன்மைசேர் தோள !
தீதெலா மிரியுஞ் சேதுநன் னட !
தகவுமிக் குடைய முகவைமா நகர !
உம்பரும் பரவு செம்பியர் மருக !
மெத்தும் புகழுறு முத்து விஜய
ரகுநாத ராஜ ராஜேசுவர சுகாலய !
கூடலம் பதியிற் கூடிய நான்காஞ்
சங்கத் தலைமை தகவினி லேற்றே
எங்கட் கெல்லா மிருங்களி யளித்த
தோன்றல்வின் முன்னோர் துளக்கற நாடித்
தொல்லிசை நட்ட நல்லியற் றமிழ்க்கு
நீயும் அனைய நீரை யாகி
ஊழி யூழி சிறந்து
வாழி வாழியிம் மண்மிசை யானே.

சைவ சித்தாந்தி

இராசராச சேதுபதிக்குச் சைவ சித்தாந்தத்தில் நல்ல ஈடுபாடு இருந்தது. திருவாவடுதுறை ஆதீன கர்த்தர்களை அவர் தம் மூதாதையரைப்போல் இவரும் போற்றினர். ஆதீன கர்த்தர் இவரைப் புகழ்ந்து பாடிய பாடல்களைக் கேட்ட சேதுபதி நன்றி தெரிவித்துப் பாடினர் :

பாவலர்கள் காவலரைப் பாடலுண்டு நல்லரனர்
கோவலம் கொண்ட குருமணியே—ஆவலுடன்
பாக்கள் அளித்தனையிப் பாரில் மறு பேறுண்டோ
மாக்களில் என்போலு வார்க்கு.

திருவாவடுதுறை ஆதீனத்தில் 17ஆம் பட்டத்தில் தலைவராக இருந்து விளங்கியவர் அம்பலவாண தேசிகர். சேதுபதிகளின் கொடையை உண்டியின் முன்பு புகழ்ந்துரைக்கும் உள்ளம் படைத்தவர் ஆதீன கர்த்தர் என்று இராசராசேசுவர சேதுபதி

பாடலிலிருந்து தெரிகிறது. திருவாவடுதுறையில் 24-1-1915ஆம் நாள் பாடிய பாடல் பின்வருமாறு :—

மனமே யினிமற்றி யாரிடஞ் சென்று வணங்கிடுவாய்
தனமே கொழித்திடுந் தண்டுறை சைத்தவ சற்குருவாய்
தினமே பலரொடும் உண்டியின் முன்புநம் சேதுபதி
அனமே யெனச்சொல்லும் அம்பல வாணன் அடியன்றியே.

**இசைப் பாவலர் - சுவைஞர் - அறிஞர்**

இராசராச சேதுபதி இயற்றிய இசைப் பாடல்கள் சில இப்பொழுதும் கிடைக்கின்றன. பாடல்களைப் பண்ணுடன் பாடினவர் இவர். அருணகிரிநாதரின் திருப்புகழ்ப் பாடல்களைப் பாடுவதில் இவருக்கு விருப்பம் மிகுதி. இராசராசேசுவர சேதுபதி மறைவு பற்றிய இரங்கற்பா வொன்றில் மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் பாடியதாவது :

விருப்பமகன் றவர்களுமே
விரும்புறநீ வீற்றிருந்திட்
டுருப்பமறத் தமிழ்விருந்தை
ஊட்டிடுதல் மறப்புறுமோ
திருப்புகழா தியவற்றைத்
திப்பியநல் இசையுடன்சொற்
றிருப்புளமும் குழைவிக்கும்
இராசரா சேந்திரனே.

'கஞ்சிரா' என்ற தோற்கருவியை இசைப்பதிலும் வல்லவர். வேம்பத்தூர்ப் பிச்சுவையர் வெண்பா இதைத் தெரிவிக்கிறது :

ஈற்று மதியணிந்த சென்னியனை யெந்நாளும்
போற்றுமுத்து ராமலிங்க பூபதியே—மாற்றிலுயர்
காவலவர் கண்ணே நின் கைக்கஞ்சி ராமானப்
பாவலவர் யார்வாசிப் பார்.

மூன்று சோழ அரசர்களின் அவைப் புலவராக விளங்கியவர் ஒட்டக்கூத்தர். அதே போன்று மூன்று சேதுபதிகளின் அவைப் புலவரா யிருந்தார் மகாவித்துவான் ரா. இராகவையங்கார். இரகுநாத சேதுபதிமீது 'நாணிக் கண் புதைத்தல்' என்ற ஒரே துறையில் 400 பாடல்கள் பாடி இலக்கிய உலகில் புகழ்படைத்தவர் பொன்னுங்கால் அமிர்த கவிராயர். அவருக்குப் பிறகு அதே நாணிக் கண் புதைத்தல் என்ற ஒரே துறையில் 400 பாடல்கள் பாடியவர் ரா. இராகவையங்கார். பாட்டுடைத் தலைவர் இராசராசேசுவர சேதுபதி. சேதுபதியின் ஆசிரியரும், அரசவைப் புலவருமான இராகவையங்கார் இராசராச சேதுபதி ஒருதுறைக் கோவையின் வாயிலாக அச் சேதுபதியின் பெயர் என்றும் நிலைத்திருக்குமாறு செய்துவிட்டார்.

**திருக்குறள் வெண்பாக்கள்** *

திருக்குறட் பாக்களுக்கு உதாரணமும் விளக்கமும் கூறிக் குறட்பாக்களைக் கொண்ட நூல்கள் பல உண்டு. அவற்றுட் சில வருமாறு :—

**சினேந்திர வெண்பா:** இரண்டாமடியில் சினேந்திரனே என்ற விளியமைந்தது. இப்பொழுது கிடைக்கவில்லை.

**இரங்கேச வெண்பா :**

இரங்கேசா என்னும் விளியமைந்தது. ஒவ்வோரதிகாரத்திலும் ஒரு குறளை யமைத்த வெண்பாக்களை உடையது.

**தினகர வெண்பா :**

தினகரரென்ற ஒருவரை முன்னிலைப்படுத்தி அதிகாரத்துக்கு ஒரு குறளாக எடுத்து அமைக்கப்பட்டது.

**வடமலை வெண்பாவும் திருமலை வெண்பாவும்** முறையே காரை வடமலையப்பப் பிள்ளையையும் திருமலைக் கொழுந்துப் பிள்ளை யென்பவரையும் முன்னிலைப்படுத்தி யமைந்தவை. ஒவ்வோர் அதிகாரத்திலிருந்தும் ஒரு குறளை இவை கொண்டுள்ளன.

**வள்ளுவர் நேரிசை :**

அரசஞ் சண்முகனார் இயற்றியதாகும். சிதம்பரம் ஈசானிய மடத்து இராமலிங்க சுவாமிகள் **முருகேசர் முதுநெறி வெண்பா** பாடியுள்ளார்.

**முதுமொழி மேல்வைப்பு :**

திருக்குறட்பாக்களையும் திருவருட் பயனிலுள்ள குறள் வெண்பாக்களையும் மேற்கோளாக உடையது. **திருத்தொண்டர் வெண்பா** என்று சொல்லப்படும் திருத்தொண்டர் மாலை, குறளை இணைத்து நாயன்மார்களுடைய வரலாற்றையும் 100 வெண்பாக்களில் கூறுகிறது.

**சோமேசர் முதுமொழி வெண்பா :**

சோமேசரை முன்னிலைப்படுத்திச் சிவஞான சுவாமிகள் இயற்றியது; 133 வெண்பாக்களைக் கொண்டது. **சிவசிவ வெண்பா**

* சிவசிவ வெண்பா முகவுரை - பதிப்பாசிரியர் டாக்டர் உ. வே. சாமிநாதையர்.

சிதம்பரம் பச்சைக் கரந்தையர் மடத்துச் சென்ன மல்லையரென்பவர் இயற்றியது. அதிகாரத்துக்கு ஒவ்வோர் குறளாக 133 வெண்பாக்களை இந்நூல் கொண்டுள்ளது. இந்நூல் அரங்கேறிய காலம் கி. பி. 1767-8. சிவ சிவா என்ற முன்னிலை உடையது. திருக்குறட் குமரேச வெண்பா தூத்துக்குடி செகவீர பாண்டியன் இயற்றியது. 1330 குறட்பாக்களையும் இணைத்து ஒவ்வொரு குறளுக்கும் ஒவ்வொரு வெண்பாவாகக் குமரேசரை முன்னிலைப் படுத்திச் செய்யப் பெற்ற நூல்; அண்மைக் காலத்து நூலாகும்.

**குறட்பாக்களமைந்த இராசராச சேதுபதியின் வெண்பாக்கள் :**

இராசராசேசுவர சேதுபதி அவ்வப்பொழுது தமிழில் பாடல்களியற்றும் பழக்கத்தை மேற்கொண்டிருந்தார். தற்போது கிடைத்த சில பாடல்களுள் 8 திருக்குறட்பாக்களை இணைத்துப் பாடிய வெண்பாக்கள் குறிப்பிடத் தக்கனவாகும். கடவுள் வாழ்த்து அதிகாரத்திலிருந்து குறளை எடுத்தாண்டு சேதுபதி இயற்றிய வெண்பா வருமாறு :]

சதுர்மறை யுங்கற்ற தசமுகனி ராமன்
பதுமபதம் போற்ருது பாழ்த்தான் — அதுபற்றிக்
கற்றதனல் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅ ரெனின்.

கற்றறிந்த இராவணனைச் சேதுபதி எடுத்துக்காட்டாகக் காட்டினர். செகவீரபாண்டியன் தாருகாவனத்து முனிவர்களை எடுத்துக்காட்டாகப் பாடினர்.

கற்றறிந்தும் தாருவனர் கல்விநலம் எய்தாமல்
குற்றமுற்ருர் என்னே குமரேசா — வெற்றிபெறக்
கற்றதனல் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்.

செய்ந்நன்றியறிதல் என்ற அதிகாரத்தின் ஒரே குறட்பாவை இணைத்துச் சேதுபதி பாடிய இரண்டு வெண்பாக்கள் உண்டு. ஒரு வெண்பாவில் இராமாயணத்திலிருந்தும் மற்ருென்றில் பாரதத்திலிருந்தும் மேற்கோள்கள் காட்டப்படுகின்றன.

சானகியைச் சாலத்தால் தான்கொள் தசமுகனைத்
தானே தடுத்தான் சடாயுகாண்—மானேகேள்
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

ஐவரையு முன்னுள் அரக்கிற்செய் மாளிகையில்
மெய்யுரைத்துக் காத்தான் விதுரன்காண்—கைமாறு
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

சிவ சிவ வெண்பாவில் குறளுக்கு மேற்கோளாக இராமாயணத்தில் வீடணன் மேல் இராவணன் விடுத்த வேலை இலக்குமணன் மார்பிலேற்ற நிகழ்ச்சி காட்டப்படுகிறது.

பூடணன்போல் வீடணன்மேற் போனவே லேற்றுநன்றி
தேடமுடி யாதே சிவசிவா—நாடியெதிர்
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

திருக்குறட் குமரேச வெண்பாவில் பாரதக் கதை நிகழ்ச்சி இடம் பெறுகிறது.

மற்றென்று மாற்றமல் மன்னனுக்கேன் கன்னனுயிர்
கொற்றமுறத் தந்தான் குமரேசா—உற்றென்று
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.

அறிவுடைமை என்ற அதிகாரத்துக் குறள் வெண்பாவுக்குப் பெரிய புராணத்திலிருந்து சிவஞான முனிவர் எடுத்துக்காட்டு மொழிகிறார். சேதுபதி பாகவதத்திலிருந்தும் இரணிய வதைப்படலத்தில் கம்ப ராமாயணத்திலிருந்தும் விளக்கம் காட்டுகிறார்.

அன்றமணர் தீவைப்ப வஞ்சியதென் னென்னென்மின்
துன்றியசீர்ச் சம்பந்தர் சோமேசா—நன்றேயாம்
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்.

மகன் சொல் கடவுள் வணங்காது மாண்டான்
அகங்கொள் இரணியன் அஞ்சா—திகமதனில்
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்.

தவம் என்ற அதிகாரம்பற்றிய திருக்குறள் வெண்பாவில் சிவனைப் பூசித்து உய்ந்த மார்க்கண்டன் கதையைச் சேதுபதி உரைக்கின்றார்:

சாற்றும் இளமையினிற் சங்கரனைப் பூசித்து
மாற்றினன் தன்வயதை மார்க்கண்டன்—தோற்றமுள்ள
கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

செகவீரபாண்டியன் மார்க்கண்டனும் சுவேதரனும் கூற்றினை வென்றதைக் கூறுகிறார்:

சாற்றுபுகழ் மார்க்கண்டர் சாருஞ் சுவேதரன்
கூற்றினையும் வென்றார் குமரேசா—ஏற்றமிகு
கூற்றம் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.

சுவேதரன் கதை இலிங்கபுராணத்தில் இடம் பெறுகிறது.

காலமறிதல் என்ற அதிகாரத்துக் குறட்பாவுக்கு பாரதத்தில் வரும் தருமன் பொறுமையைச் சேதுபதி எடுத்துக்காட்டுகிறார் :

சாலத் திரௌபதியின் றுனையுரி யக்கண்டும்
சீலத் தருமன் சினந்திலனே —மேலுறுதற்
காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

திருக்குறட் குமரேச வெண்பாவில் தந்தையைக் கொன்றவனைப் பழிவாங்கக் காத்திருந்த சீவகன் கதையைச் சிந்தாமணியிலிருந்து செகவீர பாண்டியன் மேற்கோள் காட்டுகிறார் :

காலங் கருதியேன் காத்திருந்தான் சீவகன்றன்
கோலங்கரந்து குமரேசா —ஏலுகின்ற
காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

நட்பு அதிகாரத்து ஒரே குறட்பாவுக்குச் சேதுபதி இரண்டு வெண்பாக்கள் பாடினார்:

நாகாத் திரந்தொடுத்த நாளில் அருச்சுனன்முன்
சாகாமல் தேர்தணித்தான் தண்டுளவோன்—ஏகா
உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதாம் நட்பு.

பண்டைவிது ரன்காத்தான் பாண்ட வரையரக்கு
மண்டபத்தே தீய்தனை வைத்தலுமே—கண்ட
உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதாம் நட்பு.

சிவசிவ வெண்பாவில் குசேலன் கதை நிகழ்ச்சியும் திருக்குறட் குமரேச வெண்பாவில் சீவக சிந்தாமணிக் கதையில் சுதஞ்சணன் சீவகனுக்குதவிய செய்தியும் சொல்லப்படுகின்றன:

உற்ற குசேல னலமுற் றிருத்தற்கா
சிற்றுணவுட் கொண்டான் சிவசிவா—சுற்றும்
உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதாம் நட்பு.

தேர்ந்த சுதஞ்சணனேன் சீவகன்தன் போர்த்துடனே
சூர்ந்து களைந்தான் குமரேசா—சேர்ந்த
உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

இராசராசேசுவர சேதுபதி இயற்றிய பாடல்களையும் அவரைபற்றிப் புலவர் பெருமக்கள் பாடிய பாடல்களையும் தொகுத்துத் தமிழுலகுக்கு வழங்குவதைத் தமிழிலக்கியப் பணி என்று சொல்லவும் வேண்டுமோ !

———

# சோமாஸ்கந்த திருவுரு

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம், விசாரத்,
கூட்டுறவு சங்கங்களின் இணைப்பதிவாளர் (ஓய்வு), பொள்ளாச்சி]

நீலமணி மிடற்றனை சிவபெருமான் பொதுவாக இலிங்கத் திருவுருவில் வழிபடப்பட்ட போதிலும், உலகிற்கு ஊறு விளைவிப் போரைத் தண்டிக்கவும், அன்பர்களுக்கு அருளவும் பல திரு வுருவங்களைத் தாங்கியதாகக் கொள்ளப்படுகிறான். மேலும் ஆடவல்லானாகவும், ஆன்மீகநெறி அருளும் ஆசானாகவும் பரவப்படுகிறான். இவையன்றிப் பிறைசூடிய பெம்மான், பிச்சை உகக்கும் பெம்மான் போன்றவை "என்பாக எங்கும் அணிந் தானின்" ஏனைய திருவுருவங்களாம். அவற்றில் ஒன்று சோமாஸ்கந்த திருவுரு.

கொடியேர் நுண்ணிடையாளாம் உமையாளுடன் கூடிய திருவுருவில் (உமாசகித மூர்த்தி) அண்ணல் சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்க, அன்னை இடப் பக்கத்தில் காணப்படுவாள். அத்தனை நான்கு கைகளுடனும், அம்மையை இரண்டு கைகளுட னும் அமைக்க வேண்டும். அரவம் அரைக்கசைத்த அம்மானின் பின் வலக் கையில் மழுவும், பின் இடக் கையில் மானும் இருக்க, முன் இடக் கை வரத முத்திரையிலும், முன் வலக் கை அபய முத்திரையிலும் காணப்படும். மலையரையன் பாவையின் வலக் கையில் மலரும், இடக் கை இருக்கை மீதும் இருக்கும். பண்ணிலாவிய மொழியம்மை படரும் சடைமீது பாய்புனல் அணிந்த பால் வெண்ணீற்றனை நோக்கியபடி காணப்படுவாள். இத்தகைய திருவுருவில் பெற்றோர்களுக்கு இடையில் பிணிமுக ஊர்தியான் முருகனைக் கொண்டதே சோமாஸ்கந்த திருவுரு.

நிலத்தை நான்கு பிரிவாகக் கண்ட தமிழர் குறிஞ்சிநிலக் கிழவனாகக் குன்றுதோறும் ஆடும் குமரனைக் கொண்டனர். சங்க காலத் தமிழகத்தில் வணங்கப்பெற்ற வால்வளை மேனி வாலி யோனும் பலதேவனுக்கு இற்றை நாளில் கோயில்கள் இல்லை. ஆனால் செந்தூர் வடிவேலன் அற்றை நாள் தொடங்கி இற்றை நாள்வரை தமிழகத்தின் தனிப்பெருங் கடவுளாகப் போற்றப் படுகிறான். "செந்தமிழ் நூல் விரித்தோன்" என்றும், "முத்தமி ழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்" என்றும் திருவருட் செல்வராம் அருணகிரிநாதர் அருளியுள்ளார். இதினின்றும் தமிழ்மக்களுக்கு, செவ்வேளிடம் கொண்ட ஈடுபாடு புலப்படும். செந்தமிழ்க் கடவுளாம் செங்கோட்டு

வெற்பனைக் குழந்தையாகக் காண்பதில் தமிழர்கள் தனி இன்பம் கண்டனர். இந்த நூற்றுண்டைச் சார்ந்த மகாகவி பாரதியார் கூட,

"அறிவாகிய கோயிலிலே
அருளாகிய தாய் மடிமேல்
பொறிவேலுடன் வளர்வாய்"

எனக் கூறிப் போந்தார். குழந்தையைப் பெற்றேர்களுடன் காண்பதே இயற்கை. இதன் விளைவுதான் சோமாஸ்கந்த திருவுரு. வள்ளி மணாளனின் வழிபாடு சிறப்பாக உள்ள தமிழகத்தில் அதற்கு உரிய கடவுள் திருவுருவங்களில் சோமாஸ்கந்த திருவுருவும் ஒன்றாக அமைந்ததில் வியப்பு ஏதும் இல்லை. இத்திருவுரு வடநாட்டில் இல்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

ஆகம விதிகளின்படி கந்தம்கமழ் கொன்றையணி பெம்மானுக்கும் "கொங்கியல் பூங்குழற் கொவ்வைச் செவ்வாய் கோமள மாதுமையாளுக்கும்" இடையில் சூர்மா தடிந்த கோழிக்கொடியோனைக் குழந்தையாகக் காட்ட வேண்டும். சேந்தன் நின்ற நிலை, நடன நிலை, இருக்கை அல்லது அன்னையின் மடிமீது உட்கார்ந்த நிலை என்பவற்றில் ஏதாவது ஒரு நிலையில் இருக்கலாம். அணிதிகழ் அறுமுகச் செவ்வேள் எனினும் இங்கு அவனுக்கு ஒரு தலையும் இரு கைகளும்தாம் இருக்க வேண்டும். தலையில் கரந்த மகுடம் இலங்க, காதுகளில் மகர குண்டலம் விளங்க, மார்பில் சன்னவீரம் என்ற அணிகலன் அணிந்து இருக்க வேண்டும். நின்ற நிலையில் இருப்பின், ஒரு கையில் மலரும், மற்ருெருகை கத்யவலம்பித முத்திரையும் இருக்கலாம். அல்லது இரு கைகளிலும் மலரை ஏந்தி இருக்கலாம். "சில்பரத்னம்" என்ற ஆகமத்தின்படி, "குருகு பெயர்க் குன்றம் கொன்ருன்" மேலாடை ஏதுமின்றி (குழந்தை அல்லவா) இடக்கை வரத முத்திரையிலும் வலக் கை புத்தகத்துடனும் இருக்க வேண்டும். நடன நிலையில் இருப்பின், வலக் கை சூசி முத்திரையிலும், இடக்கையில் பழமும் இருக்கவேண்டும். "கரண ஆகம" விதிகளின்படி, சோமாஸ்கந்த திருவுருவிற்கு இரு மருங்கும் மாமுது முதல்வனும் நான்முகனும் கொண்டல்வண்ணனும் திருமாலும் தம்தம் மனைவியருடன் அமைக்கப்பட வேண்டும்.

காடரங்கா மாநடமாடிய நீதியனின் பல்வேறு திருவுருவங்களைச் சைவ சமய குரவர்களில் தலைசிறந்த மூவரும் தமது திருப்பதிகங்களில் பலவாற்ருனும் போற்றிப் பரவி இசைத்துள்ளனர்.

திருஞான சம்பந்தப் பெருமான் சப்தவிடங்கத் தலங்களில் ஒன்றான திருக்காருயில் என்னும் பதியில் எழுந்தருளியுள்ள கண்ணுயிரநாதர் மீது பாடிய திருப்பதிகத்தில்,

''தாயானே தந்தையும் ஆகிய தன்மைகள்
ஆயானே ஆயஈல்லன்பர்க்கு அணியானே
சேயானே''

எனத் திங்கள்தங்கு தாழ்சடையானைத் தாயாகவும், தந்தையாகவும், சேயாகவும் கூறியுள்ளார். இது சோமாஸ்கந்த திருவுருவினைக் குறிக்கும் குறிப்பாகக் கொள்ளப்படுகிறது. இக் குறிப்பைத் தவிர, இறையருட் செல்வர்களான மூவரும் தம் திருப்பதிகங்களில் இத்திருவுருவைப்பற்றி வேறு எங்கும் குறிப்பிடவில்லை.

தமிழகத்தில் பண்டை நாள்தொட்டு, கோயில்கள் இருந்தமைக்கு இலக்கியச் சான்றுகளும், பிறவும் உள்ளன. சங்ககால இலக்கியமான புறநானூற்றில் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்தும் காரிகிழார்,

''பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே''

என்று குறிப்பிட்டுள்ளார். அஃதாவது முனிவர்களால் வணங்கப் பெறும் நுதல்விழி நாட்டத்து இறையோனின் கோயிலை வலம் வருகையில் பாண்டியமன்னனது வெண்கொற்றக்குடை வணக்கத்திற்கு அறிகுறியாகத் தாழ வேண்டும் என்பதாம். கி. பி. 600 முதல் 630 வரை காஞ்சியில் செங்கோலோச்சிய பல்லவப் பேரரசன் முதலாம் மகேந்திரவர்மனின் சமகாலத்தவரான திருஞான சம்பந்தப் பெருமான் நான்மாடக்கூடல் பற்றிய தமது திருப்பதிகத்தில்,

''கணங்களாய்வரினுந் தமியராய்வரினும் அடியவர் தங்களைக் கண்டால்
குணங்கொடு பணியும் குலச்சிறை குலாவுங் கோபுரஞ் சூழ்மணிக்கோயில்''

என்று தீதுதீர் மதுரையம்பதியில் உள்ள ஆலவாய்க் கோபுரத்துடன் கூடிய மணிக்கோயில் என்று அருளியுள்ளார். ''குறியவும் நெடியவும் குன்று கண்டன்ன'' பொலிவு பெற்ற அற்றை நாள் கோயில்கள்,

''சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டம்'' என்று மணிமேகலையிற் குறிப்பிட்டாற்போன்று செங்கல்லால் கட்டப் பெற்றமையால், அவை காலத்தை எதிர்த்து நிற்க இயலாது அழிந்து போயின. இற்றை நாள் கோயில்களின் வளர்ச்சியின்

முதற்கட்டம் குடைவரைக் கோயில்கள். இவற்றைத் தமிழகத்தில் தோற்றுவித்த பேறுபெற்றவன் "விசித்திரசித்தன்" என்று தன்னைக் கூறிக்கொள்ளும் பல்லவப் பேரரசன் முதலாம் மகேந்திரவர்மன். இவன் காலத்திலும் இவன் மகன் வாதாபி கொண்ட மாமல்லன் என்ற புகழ் மிக்க முதலாம் நரசிம்மவர்மன் காலத்திலும், இவனுடைய பேரன் பரமேசுவரவர்மன் காலத்திலும் உருவாக்கப்பெற்ற குடைவரைக் கோயில்களின் கருவறையில் இறைஉரு ஏதும் இல்லை. பரமேசுவரவர்மன் மகனாகிய இரண்டாம் நரசிம்மவர்மன் எனப்பெற்ற இராசசிம்மன் காலத்தில் உண்டாக்கப்பெற்ற குடைவரைக் கோயில்களிலும், எழுப்பப் பெற்ற கற்றளிகளிலும் கருவறையின் பின்சுவரில் சோமாஸ்கந்த திருவுரு புடைசிற்பமாக உருவாக்கப் பெற்றது.

கி. பி. 680 முதல் 700 வரை பல்லவ அரியணையை அலங்கரித்த இராசசிம்மன் சிவனை முழுதும் மறவாத சிந்தையான். இவன் தன்னை "சிவசூடாமணி", "ஈசான பக்தன்", "தேவ தேவபக்தன்", "ஸ்ரீ சங்கர பக்தன்" என்று பெருமைப்படக் கூறிக்கொள்வதினின்றும் கூற்றை உதைத்த கூத்தனிடம் இவன் கொண்ட அளவற்ற அன்பு தெளிவாகிறது. குடைவரைக் கோயில்களை உருவாக்கியதோடு, தன் தந்தையால் தொடங்கப் பெற்ற கற்றளிகளைக் கட்டி முடிக்கும் பணியினையும் போற்றத் தக்க வகையில் செய்துள்ளான். இவனால் கட்டப்பெற்ற கற்றளிகளாவன காஞ்சிபுரம் கைலாயநாதர் கோயில், மாமல்லபுரம் கடற்கரைக் கோயில், பனமலை தளபுரீசுவரர் கோயில் என்பனவாம். இவை சிற்பக்கலை உலகில் மாபெரும் புகழ் அடைந்துள்ளன.

மாமல்லபுரத்தில் சிறந்த முறையில் முற்றுப்பெற்ற இராமானுச மண்டபத்தின் கருவறையின் பின்சுவரில் சோமாஸ்கந்த திருவுரு புடைசிற்பமாகச் செதுக்கப் பெற்றுள்ளது. இந்தத் திருவுருவின் காலடியில் உருவம் ஏதும் இல்லை. இங்குள்ள மற்றொரு குடைவரைக் கோயிலான "யமபுரி" எனப்பெறும் "மகிஷாசுரமர்த்தினி" கோயிலின் கருவறையின் பின் சுவரில் அண்ணல் சுகாசனத்தில் நான்கு கைகளுடன், விளங்குகிறார். அன்னை இரண்டு கைகளுடனும் அறுமுகனைத் தம் மடிமீது வைத்தும் காணப்படுகிறார். இவர்களது காலடியில் காளையும் அன்பன் ஒருவனும் உள்ளனர். விடை மற்றும் அடியார் ஒருவருடன் கூடிய சோமாஸ்கந்த திருவுரு இது ஒன்றுதான். இத் திருவுருவிற்கு இருபுறமும் அயனும் அரியும் காணப்படுகின்றனர். இவர்களுடன் ஞாயிறு இங்குக் காட்டப்பட்டுள்ளது இதன் தனிச்

சிறப்புகளில் ஒன்றும். இங்குள்ள "ஈஸ்வரகிருகம்" எனப்படும் தர்மராச இரதத்தின் மூன்றுவது நிலையில் உள்ள கருவறையிலும் இத் திருவுருவம் காணப்படுகிறது. மாமல்லபுரத்தை அடுத்துள்ள சாலுவன் குப்பத்தில் உள்ள "அதிரான சந்த பல்லவகிருகம்" எனப்பெறும் குடைவரைக் கோயிலின் கருவறையின் பின்சுவரில் வெண்கொற்றக் குடையுடனும், மலரோனும் மாலும் புடை சூழவும் சோமாஸ்கந்த திருவுரு புடைசிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. கருவறை அடுத்த முன்மண்டபத்தில் இருபுறமும் சோமாஸ்கந்த திருவுருவங்கள் அமைக்கப் பட்டுள்ளன. மேலும் இம் மன்னனுல் கட்டப்பெற்ற கைலாய நாதர் கோயில், கடற்கோயில், தளபுரீசுவரர் கோயில் ஆகியவற்றின் கருவறையின் பின்சுவரிலும் இத்திருவுரு உருவாக்கப் பெற்றுள்ளது தளபுரீசுவரர் கோயிலில் கருவறையின் பின் சுவரில் காணப்பெறும் திருவுருவுடன் முன்புறத்தில் மறையவனும், பாற்கடலில் பள்ளி கொண்டோனும் தம் தம் மனைவியருடன் புடை சிற்பமாக உள்ளனர். சோமாஸ்கந்த திருவுருவிற்கு முன் பொதுவாக பதினறு பட்டை தீட்டிய தாரை இலிங்கம் வைக்கப்பெற்று இருக்கும்.

மேலே குறிப்பிட்ட திருவுருவங்களினின்றும் மாறுபட்ட திருவுரு திருச்சியை அடுத்த திருப்பைஞ்ஞீலியில் உள்ள குடைவரைக் கோயிலில் காணப்படுகிறது. இங்கு அன்னை சென்று அடையாத திருவுடைய அப்பனுக்கு இடப் பக்கத்திற்குப் பதிலாக வலப் பக்கம் அமைக்கப்பட்டுள்ளாள். மேலும் இதன் காலடியில் உள்ள உரு, யமன் என்று சொல்லப்படுகிறது. எனவே இது "யமன் கோயில்" என்று இங்குக் கூறப்படுகிறது. அறியாமையைக் குறிக்கும் முயலகனைத்தான் ஆடவல்லான் மற்றும் ஆலமர் செல்வன் காலடியில் அமைப்பது மரபு. அதற்குக் காரணம் அறியாமையாகிய இருள் அகன்றுலன்றி,

> இளம்பருதி நூறுயிரம் கோடிபோல சோதி
> வளந்தரு தெய்வீக வடிவைக்

காண இயலாது என்பதுதான். எனவே இங்குக் காலடியில் உள்ள உருவை முயலகனுகக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது.

பல்லவப் பேரரசன் இராசசிம்மன் காலத்திற்குப் பின் சோமாஸ்கந்த திருவுரு கருவறையில் அமைக்கப்பட்டதாகத் தெரியவில்லை. எனவே, இத் திருவுருவை இவன் காலத்திய தனிச் சிறப்பாகக் கொள்ளலாம்.

———

# குடந்தையில் நினைவுக் கூட்டம்

முன்னுள் கழக ஆட்சியர், தாமரைச் செல்வர் வ. சு அவர்களின் நினைவுக் கூட்டம், குடந்தை சை. சி. நூற்பதிப்புக் கழகக் கிளையின் சார்பில் 18-3-83 மாலை விசயராகவாச்சாரி அரங்கில் நடைபெற்றது.

திரு. கதிர் தமிழ்வாணன் அவர்கள் இறைவணக்கத்துடன் கூட்டம் துவங்கிற்று. கழக ஆட்சியர் திரு. இரா. முத்துக் குமாரசாமி, எம். ஏ., பி. லிப்., அவர்கள் முன்னுரை ஆற்றியபின் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் உயர்திரு கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., அவர்கள் தாமரைத் திரு. வ. சு. அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைக்கும் முகத்தான் பேசுகையில்,

“ஐயா அவர்களின் பணிகளைப் பாராட்டி ‘பத்மஸ்ரீ’ என்ற விருதினை மைய அரசும், ‘செந்தமிழ்ச் செல்வர்’ என்னும் விருதினைத் தமிழக அரசும்; ‘பேரவைச் செம்மல்’ என்னும் விருதினை மதுரைக் காமராசர் பல்கலைக் கழகமும் வழங்கிச் சிறப்பித்தன.

“பேரறிஞர் அண்ணா அவர்களின் பரிந்துரையின் பேரில் மைய அரசு பத்மஸ்ரீ விருதினை வழங்கியபோது ஐயா அவர்கள், அது, வடமொழியில் இருப்பதால் அதனை ஏற்றுக்கொள்ள முதலில் தயங்கினர்கள். ஆனால், அப்பட்டத்தினை ஏற்றுக்கொள்வதில் தவறில்லை என்று அறிஞர் பலர் சொன்ன பிறகுதான் அதனை ஏற்றுக்கொண்டார்கள். ஐயா அவர்கள் தமக்கு வரும் பாராட்டுகளைவிடக் கழக நூல்களை வாங்கி, அவற்றின் விற்பனையைப் பெருக்குவதுதான் தமக்குச் செய்யும் சிறந்த பாராட்டு என்பார்கள். தனிப்பட்ட முறையில் தமது வளர்ச்சிக்கென அவர்கள் எதுவும் கேட்டதில்லை. இதை முன்னாள் மைய அரசின் அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்களும் குறிப்பிட்டுப் பாராட்டியுள்ளார்கள். ஐயா அவர்கள் வாணிபம் மட்டுமே குறிக்கோளாகக் கொண்டவர்கள் அல்லர். தமிழ்க் கலை, நாகரிகம், பண்பாடு ஆகியவற்றின் வளர்ச்சிக்காகவே தொண்டாற்றினர்கள்” என்று குறிப்பிட்டார்.

அடுத்து, குடந்தை அரசு ஆடவர் கல்லூரி முதல்வர் உயர்திரு. மா. இராமலிங்கம் (எழில் முதல்வன்) அவர்கள் தமது தலைமை உரையில்,

“ஐயா அவர்களின் பெயரின் முன்னெழுத்தாக இருக்கும் வகரம், அவர்தம் தந்தையார் வயிரமுத்துப் பிள்ளை அவர்களின்

பெயரை மட்டும் குறிக்கவில்லை. அவர் ஒரு வரலாற்றுப் புகழ் பெற்றவர் என்பதையும் குறிப்பதாகும் என்றே கருதுகிறேன். அவர்கள் மொழி சமயம் நாடு என்ற ஒரே சிந்தனையில்தான் வாழ்ந்தார்கள். சைவம் தழைப்பதற்காகவே சுப்பையா பிள்ளை அவர்கள் தோன்றினார்கள் என எண்ணத் தோன்றுகிறது. சுப்பையா பிள்ளை அவர்கள் தோன்றியிராவிட்டால் சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் வெளிவந்திருக்குமா என்பது ஐயமே'' என்று குறிப்பிட்டார்.

**சிறப்புரை**

"தாமரைத் திரு. வ. சு. அவர்களின் பணிநலம் பாராட்டல்'' என்னும் தலைப்பில், கரத்தைப் புலவர் கல்லூரி முதல்வர் உயர்திரு விருத்தாசலம் அவர்கள் பேசுகையில்,

''மறைமலையடிகளாருக்குத் தொண்டு செய்வதே தம்முடைய பெரும் பேறாகக் கருதித் தொண்டாற்றியவர் சுப்பையா பிள்ளை அவர்கள். அடிகள், 'வ.சு.' அவர்களை இளமையில்சந்தித்தபோது வா. சுப்பையா, தமிழுக்குத் தொண்டு செய்ய வா. சுப்பையா,' என்று சொன்னதற்கு ஏற்றாற்போல் பிற்காலத்தில் மறைமலை யடிகளார் நூலகத்தை நிறுவித் தமிழ்த் தொண்டாற்றியவர் சுப்பையா பிள்ளை என்றே கருதுகிறேன். அவர் 'செந்தமிழ்ச் செல்வி'க்கு வரும் கட்டுரைகளைத் தேர்ந்தெடுக்கும்போது எழுதியவரின் பட்டங்களைப்பற்றிப் பாராது உண்மையை மட்டுமே ஊடுருவிப் பார்க்கும் ஆற்றலோடு விளங்கித் தகுதி யுடைய கட்டுரைகளையே செந்தமிழ்ச் செல்வியில் வெளியிடும் ஆற்றல் பெற்றவர். 'பிள்ளை' என்ற சொல்லுக்கு ஆற்றலுடைய வர்-வீர முடையவர் என்று பொருள் கூறுகிறது புறப்பொருள். அந்த வகையில் ஆயிரத்துக்கு மேற்பட்ட தமிழ் நூல்களை வெளி யிட்ட ஆற்றல் பெற்ற செயல் மறவர் சுப்பையா பிள்ளை அவர் களாவார்.

சங்கராச்சாரியார் போன்றவர்கள் திருக்குறள் பற்றித் தவறான கருத்துகளை வெளியிட்டபோது, தக்க தமிழ் அறிஞர்களைக் கொண்டு கூட்டங்கள் வாயிலாகவும் கட்டுரைகள் வாயிலாகவும் தக்க மாற்று மருந்துதந்த சீர்திருத்த மறவர் ஆவர். நாட்டிலே எந்த அரசியல் வந்தபோதும் தவறாது தமிழ்த் தொண்டினைத் தொடர்ந்து செய்து வந்தவர் சுப்பையா பிள்ளை. தமிழினத்தை ஒன்றுபடுத்த வேண்டும் என்பது அவர் குறிக் கோள். நாம் அவரிடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டிய பாடம் இது என்று கருதுகிறேன்." என்று குறிப்பிட்டார்.

அரசர் கல்லூரி முதல்வர் உயர்திரு சண்முகானந்தம் அவர்கள் (பாரதிபித்தன்) பேசுகையில்,

"திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் ஒரு பதிப்பாளராக மட்டுமன்றி, ஓர் இயக்கமாகவே வாழ்ந்திருக்கிறார்கள். தமிழ் நாட்டில் இன்று இல்லந்தோறும் திருக்குறள் நூல் இருக்கிற தென்றால், அதற்குக் காரணமாயிருந்தவர் திரு. சுப்பையாபிள்ளை அவர்களே. தமிழ்நாட்டில் திராவிட இயக்கம் கால்கொள்ளக் காரணமாயிருந்தது சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் எனலாம்" என்று குறிப்பிட்டார்.

மயிலாடுதுறை ஏ. வி. சி. கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் உயர்திரு. தி. வ. காந்திமதி நாதன் அவர்கள் பேசுகையில், திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் விட்டுச் சென்ற பணிகள் சிறக்கும் படி நாமெல்லாம் ஒன்றுபட்டு இன்றைய ஆட்சியருக்கு உதவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

தருமையாதீனக் கல்லூரிப் பேராசிரியர் உயர்திரு மு. சிவச் சந்திரன் அவர்கள் பேசுகையில், "தமிழ்நாட்டில் புலவர்கள் வாழுங் காலத்தில் அவர்களைப் பாராட்டும் பண்பு தமிழர்களிடையே இருந்ததில்லை. ஆனால் திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் புலவர் களை அவர்கள் வாழ்ந்த காலத்திலேயே பாராட்டிப் போற்றியவர் என்றும், திருக்குறளை நாட்காட்டி வாயிலாகவும், நாட்குறிப்பு வாயிலாகவும் பரப்பி வந்தவர் என்றும் குறிப்பிட்டார்.

பொறையாறு டி. பி. எம். கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் உயர்திரு இராமமூர்த்தி அவர்கள் பேசுகையில்,

சுப்பையா பிள்ளை அவர்கள் சமுதாயத்திற்கு மிக முக்கிய மான பணியாற்றியுள்ளார்கள். திருக்குறள் பணியே கழகத்தின் பணியென்று அவர்கள் கூறிவந்ததோடு ஜி. யூ. போப் போன்ற வர்களின் திருக்குறள் ஆங்கில மொழி பெயர்ப்பு நூல்களை வெளி யிட்டார்கள் என்று குறிப்பிட்டார்.

அடுத்து அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் திரு. ச. மெய்யப்பன், பொறையாறு தவசமுத்து நாடார் மேல்நிலைப் பள்ளித் தமிழாசிரியரும் மறைத்திரு மாணிக்கவாசகம் அவர்களின் மருமகனுமான உயர்திரு புலவர் சு. கிருட்டிணமூர்த்தி, குடந்தைத் தமிழாசிரியர் உயர்திரு. திருநாவுக்கரசு, குடந்தை நகர மேல்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் உயர்திரு சேது ராமலிங்கம், அம்மாப்பேட்டை, மேல்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் உயர்திரு புலவர் இராமசாமி

குடந்தை சிறிய மலர் மேல்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் உயர்திரு கவிஞர் முகிலன், திருவிடைமருதூர் திருவாவடுதுறை ஆதீன மேல்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் உயர்திரு இராசு, நாராயண சாமிகள் தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த உயர்திரு சொ. மகாதேவன் ஆகியோர் ஆட்சியர் திரு. வ. சு. அவர்களின் பணி நலம்பற்றிப் பாராட்டிப் பேசினர். மயிலாடுதுறை ஏ. வி. சி,கல்லூரி உயர்திரு கலியபெருமாள் அவர்கள் இரங்கற்பா ஒன்றினைப் பாடினர்.

———

**ஆசிரியருக்குக் கடிதம் :**

## சமஃச்கிருதம் தமிழுக்குத் தாயாகுமா?

கடந்த திசம்பர்த் திங்கள் 25ஆம் நாளைய இந்தியன் எக்ஃச்பிரஸ் (Indian Express) இதழில் "ஆசிரியருக்குக் கடிதங்கள்" என்ற பகுதியில் 'M. K's Philippic' என்ற தலைப்பில் வெளிவந்த கடிதங்கள் இரண்டு. அவற்றில் இரண்டாவதில், "சமஃச்கிருதம் எல்லா மொழி களுக்கும் தாய் என்பதனை எவரும் புறக்கணிக்க முடியாது" என்று எழுதப்பட்டிருந்தது. அதனை மறுத்து 28-12-82இல் "இது உண்மை யன்று. வட இந்தியாவிலுள்ள சில மொழிகளுக்குச் சமஃச்கிருதம் தாயாக இருக்கலாம். தெற்கிலுள்ள மொழிகளுக்கு அது ஒருபோதும் தாயாக இருந்ததில்லை, உண்மை என்னவென்றால் சமஃச்கிருத நெடுங் கணக்குத் திராவிட நெடுங்கணக்கைத் தழுவியுள்ளது. எவ்வாறெனில் ஆசிரியர் இந்தியாவுக்கு வடமேற்கிலுள்ள நாடுகளிலிருந்து இந்தியா வுக்குள் நுழைந்தபோது, அவர்கள் ஒரு மொழி பேசினர்கள் என்பது வெளிப்படை—ஆனல் அம்மொழி எழுத்து வடிவம் பெறவில்லை. அதனை எழுத ஆரம்பித்தபோது அங்கு அக்காலத்தில் நிலவியிருந்த திராவிட மொழியின் நெடுங்கணக்கினைத் தழுவிக் கொண்டனர். எனவேதான், சமஃச்கிருத நெடுங்கணக்கு, அம்மொழியின் இனத்தைச் சேர்ந்த கிரேக்க இலத்தீன் நெடுங் கணக்கினின்று வேறுபட்டுக் காணப் படுகின்றது. சமஃச்கிருதத்தில் காணப்படும் உயிர் எழுத்து, மெய் எழுத்து என்ற பாகுபாடு திராவிட மொழிகளுக்குரியது. கிரேக்க இலத்தீன் மொழிகளில் a b c d e f என்றுதான் காணப்படுகின்றன. எனவே, ஒரு மொழி எனப்படும் அளவில் சமஃச்கிருதத்திற்கும் திராவிட மொழிகளுக்கும் எத்தகைய தொடர்பும் இல்லை" என்று ஒரு கடிதம் எழுதி அனுப்பினேன். அக்கடிதம் இன்றுவரை வெளி யிடப் பெறுமல் இருட்டடிப்புச் செய்யப்பட்டுள்ளது.

7, சில்வன் காலனி
2-வது தெரு,
சென்னை-10

ப. சோதி முத்து

# திருச்சியில் நினைவுக் கூட்டம்

மறைந்த கழக ஆட்சியர் தாமரைத் திரு. வ. சு. அவர்களின் பணிநலம் பாராட்டு முகத்தான் 20-3-83ல் திருச்சி தமிழ்ச் சங்க மன்றத்தில் சை. சி. நூற்பதிப்புக் கழகத்தின் திருச்சிக் கிளையின் சார்பில் நினைவுக் கூட்டம் நடைபெற்றது.

புலவர் மு. வைத்தியநாதன் அவர்களின் தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலுடன் கூட்டம் துவங்கிற்று. இந்நாள் கழக ஆட்சியர் உயர்திரு இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப், அவர்கள் முன்னுரை ஆற்றினர்.

திருச்சி மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர் உயர்திரு சு. இராதா கிருஷ்ண பிள்ளை அவர்கள், தாமரைத் திரு. வ. சு. அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில்,

"கழகத்தின் மூலமாக வெளிவந்த நூல்களைப் பெற்றிராத இல்லங்கள் தமிழ்நாட்டில் இல்லையென்றே கூறலாம். தமிழ் வளர்ச்சிக்காகவும், சைவத்திற்காகவும் அவர்கள் எண்ணற்ற நூல்களை வெளியிட்டுள்ளனர். சங்க இலக்கியங்கள் முதல் பக்தி இலக்கியங்கள் வரை உள்ள நூல்கள் அனைத்தையும் நாம் படிக்க முடியாவிட்டாலும் படிக்க வேண்டிய முக்கியமான பகுதிகளை மட்டும் அவர்கள் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள். பழந்தமிழ் இலக்கியங்களை உரையுடன் தொகுத்து அவற்றைப் பேழைகளில் வைத்து வழங்கிய பெருமை திரு. சுப்பையா பிள்ளை அவர்களுக்கே உண்டு. மாணவர்களும் ஆசிரியர்களும் விரும்பிப் படிக்கத்தக்க வகையில் அழகிய முறையில்—படிக்க ஆர்வமூட்டும் முறையில் நூல்களை வெளியிட்டதோடு, 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் மாத இதழையும் வெளியிட்டு வருகிறது கழகம். இத்தகைய அரிய பணிகளாற்றிய அந்தத் தமிழ்ப் பெருமகனாரை நாம் என்றென்றும் மறக்க இயலாது" என்று குறிப்பிட்டார்.

அடுத்து, முத்தமிழ்க் காவலர் டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தமது தலைமை உரையில் "தமிழுக்குத் தொண்டு செய்வோர் சாவதில்லை" என்றார் பாவேந்தர். அப்படிச் சொன்னால் அவருடைய புகழ் தமிழ்மொழி உள்ளஅளவும் சாவதில்லை என்றுதான் பொருள். சென்ற நூற்றாண்டில் தோன்றிய தமிழ்ப் பேரறிஞர்கள் பலர். மறைமலையடிகள், நாவலர் சோமசுந்தர பாரதியார், பண்டிதமணி கதிரேசன் செட்டியார், சதாசிவ பண்டாரத்தார், கா. சு. பிள்ளை போன்றவர்களுள் ஒருவர்தாம் சுப்பையா பிள்ளை இவருடைய தமையனார் திருவரங்கம் பிள்ளை

ஆங்கிலத்திலும் தமிழிலும் வல்லவரான மறைமலையடிகள் ஆங்கிலத்திலுள்ள விலையுயர்ந்த நூல்களை வாங்கிப் படித்தவர். ஆகவே, அவற்றைப்போல் தமிழ்நூல்களையும் கொண்டுவரவேண்டுமென்று திருவரங்கனாரைத் தூண்டினார். அதனால் அவர் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைத் தோற்றுவித்தார். மேனாட்டு நூல்களைப்போல், அழகாக-அழுத்தமாக- உயர்ந்த தாளில் நல்ல தமிழ் நூல்களை அச்சடித்த பெருமை திரு. சுப்பையா பிள்ளை அவர்களையே சாரும். மேனாட்டுப் பைபிளைப்போல் திருக்குறளைப் பைண்டு செய்து வெளியிட்டார். திருவரங்கனாரை விட அதிகமாகத் தொண்டு செய்தவர் சுப்பையா பிள்ளை.

புத்தகம் பதிப்பித்தவர்களில் யார் 'பத்மஸ்ரீ' பட்டம் பெற்றிருக்கிறார்கள், சுப்பையா பிள்ளையைத் தவிர. அது வடமொழிப் பட்டம், எனவே, வேண்டாம் என்றார் டாக்டர் மு. வ. ஆனால் சுப்பையா பிள்ளை அதை ஏற்றுக்கொண்ட போதிலும் 'தாமரைத் திரு' என்று தமிழாக்கம் செய்து அதன் பெருமையை மிகுத்துக் காட்டினார். இந்தக் காலத்தில் கழகத்தைத் தவிர, வேறு எந்தப் பதிப்பகம் ஆயிரத்துக்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டிருக்கிறது? அதுவும் சுப்பையா பிள்ளையைத் தவிர வேறு யாருமில்லை.

மறைமலையடிகளாரின் மருகர் திருவரங்கம் பிள்ளை. அவருடைய தம்பி சுப்பையா பிள்ளை. சுப்பையா பிள்ளையின் மருகர் இரா. முத்துக் குமாரசாமி. இவர்களும் அந்தப் பாரம்பரியத்தில்- அந்த மரபில் வந்தவர்.

சுப்பையா பிள்ளை செய்த அரிய செயல்களுள் மிகச் சிறந்தது மறைமலையடிகள் நூல் நிலையத்தை நிறுவியதுதான். இத்தகைய அரிய நூல் நிலையம் தமிழகத்தில் வேறு எங்குமில்லை. மேனாட்டாரும் செய்ய முடியாத அரிய அமைப்பாக அதனைச் செய்துள்ளார். பழைய இதழ்களையும், வேறு எங்கும் கிடைத்தற்கு அரிய நூல்களையும் அங்குப் பார்க்கலாம். என்னிடம் பொருளும் நூல்களும் கொடுத்து இதைப்போல் நடத்து என்று சொன்னால் என்னால்கூட இவ்வளவு திறமையாக நடத்த முடியாது. அவ்வளவு சிறப்பாக இருக்கிறது அந்த நூலகம்,

தமிழ் நாட்டில் இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடந்தபோது சுப்பையா பிள்ளை தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் நிறுவி அதன் வழி இந்தியை எதிர்த்தார். தமிழ்க்கொடி, தமிழ்ச் சின்னம் பொறித்த போர்வை, சேலை என்றெல்லாம் உண்டாக்கி தமிழ் உணர்வை உருவாக்கினார். இவ்வாறு தமிழுக்கும் சைவத்திற்கும் தொண்டாற்

## குடந்தையில் ஆட்சியர் வ. சு.
## நினைவுக் கூட்டம் (18-3-1983)



ஆட்சியர் வ. சு. அவர்களின் திருவுருவப் படத்தைத்
திறந்து வைத்து உரையாற்றினார் பேராசிரியர்
கு. சுந்தரமூர்த்தி அவர்கள்



டாக்டர் மா. இராமலிங்கம் (எழில் முதல்வன்)
தலைமையுரை ஆற்றுகிறார்

## திருச்சியில் தாமரைச் செல்வர், வ. சு. நினைவுக் கூட்டம் (20-3-83)



முத்தமிழ்க் காவலர்
டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள்
தலைமை உரையாற்றுகிறார்



முத்தமிழ்க் காவலர். கி. ஆ. பெ விசுவநாதம்,
மற்றும் உயர்திரு. கா, பெரியசாமி உயர்கல்வி அதிகாரி
சு. இராதாகிருட்டிண பிள்ளை ஆகியோர்

றிய சுப்பையாபிள்ளை அவர்களின் புகழ் என்றென்றும் நின்று நிலவும்'' என்றுகூறினர்.

சிறப்புரை :

அடுத்து வ. சு. அவர்களின் பணிநலம் பாராட்டு முகத்தான் தமிழிசைச் செவ்வேள் திரு. பொ. மாணிக்கவாசகம் பிள்ளை, அவர்கள், தமிழ்ச் சங்க அமைச்சர் திரு. சா. பெரியசாமி அவர்கள், ஜமால் முகம்மது கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் சி. நயினர் முகம்மது அவர்கள், தூயவளனர் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் சா. சாமிமுத்து அவர்கள், பிஷப் ஹீபர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் ப. ச. ஏசுதாசன் அவர்கள், ஈ. வே. ரா. பெரியார் கல்லூரி தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் இரா. அரங்கசாமி அவர்கள், புலவர் திரு. வைத்தியநாதன் அவர்கள், தலைமை ஆசிரியரும், டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் இளவலுமான திரு. ந. சுப்பராயன் அவர்கள், புத்தூர் கண் மருத்துவர் இரா. கலைக்கோவன் அவர்கள், திருச்சி மருத்துவர் திரு. பழனியாண்டி அவர்கள் ஆகியோரும், பழநியப்பா புத்தக நிறுவனர், பாரதிதாசன் பல்கலைக் கழக நூலகர் திரு. அ. சுந்தரராசன் அவர்கள், திருச்சி வானொலி நிலையம் திரு. தே. சந்திரன் அவர்கள், ஆகியோரும் திரு. வ. சு. அவர்களின் பணி நலங்களைப் பாராட்டிச் சிறப்புரை ஆற்றினர். புலவர் மு. வைத்தியநாதன் அவர்கள் நன்றி நவின்றார்.

———

## அன்பர்கள் கவனிக்க!

கழக முகவரியில் மாற்றம் ஏதும் இல்லாவிடினும் அஞ்சல் குறிப்பு எண் (Pin code) 600001 என்பது மட்டும் 600108 என மாற்றப்பட்டுள்ளது. கடிதத் தொடர்பு கொள்வோர் இனி அஞ்சல் பெட்டி 85, சென்னை-108 என்றே குறிப்பிடவேண்டுகிறோம்.

ஆசிரியர்.

*　　*　　*

## மணிவிழாக் கண்ட வள்ளல்
## நா. மகாலிங்கனார்

பொள்ளாச்சி அருட்செல்வரும், பல தொழில் நிறுவனங்களின் தலைவரும், வள்ளல் இராமலிங்க அடிகளார் பணி மன்றத் தலைவரும், தமிழ்ப்பற்றுளருமான வள்ளல் பெருந்தகை அவர்களின் மணிவிழா 15-3-1983ல் திருவிடை மருதூரில் மிகச் சீரும் சிறப்புமாக நடைபெற்றது.



இவ் விழாவிற்கு முத்தமிழ்க் காவலர் டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தலைமை தாங்கியதும், ஊரன் அடிகள் தவத்திரு இராமசாமி அடிகளார் போன்ற பெருமக்கள் கலந்துகொண்டதும் சாலப் பொருத்தமும் சிறப்பும் உடையதாகும். முன்னாள் கழக ஆட்சியர் வ. சு அவர்கள் திரு. மகாலிங்கனூர்க்கு நெருங்கிய அன்பராயிருந்தவர். இவ் விழாவில் பங்கு பெற அவர்கள் இல்லாமற் போனது ஒரு குறையே யெனினும் ஆட்சியர் வ. சு. அவர்களின் மருகரும் இன்றைய ஆட்சியாளருமான திரு. இரா. முத்துக்குமாரசாமி எம். ஏ., பி. லிப். அவர்கள் கலந்துகொண்டது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

திரு. மகாலிங்கனூர் பெருஞ் செல்வராயினும் எளிமைக்கும் எவருடனும் இனிமையாகப் பழகும் பண்பிற்கும் உறைவிடமாவார். இவர்கட்குப் பொது நிலையில் (சன்மார்க்கத்தில்) அதிக ஈடுபாடு உண்டு. எனவேதான், வள்ளலாரின் சுத்த சன்மார்க்க நெறியினையாண்டும் பரப்பும் பணியினைத் தவறாது செய்து வருகின்றனர். நாட்டு விடுதலையில் நாட்டங்கொண்டு நற்பணிகள் ஆற்றிய இவர் நாடு விடுதலை பெற்ற பின்னர் அரசியல் கட்சிகள் எதிலும் சாராமல் நாட்டு ஒருமைப்பாட்டினை வற்புறுத்தி வருகின்றார். நாட்டு விடுதலைப் போரில் ஈடுபட்டு அதனால் வறுமையில் வாடுவோர்க்குப் பேருதவிகள் செய்துவரும் பெருந்தகையாவார். தூய உள்ளத்தினராகிய இவர்கள் தம் இயல்பிற்கேற்ப

என்றும் தூய கதராடையினேயே உடுத்தி வருகிருர். ஏழையர்க்கு உதவுதல் இவர்தம் சீரிய நோக்கமாகும்.

கற்றவர்களைப் போற்றும் கலைச் செல்வராகிய இவர், தமிழ்மொழியிடமும் அதனைப் போற்றிப் புரக்கும் கழகத்திடமும் அதன் ஆட்சியர் மறைந்த தாமரைச் செல்வர் வ. சு. அவர்களிட மும் நீங்காத பற்றுக் கொண்டவர். கழக விழாக்களில் பங்கு கொள்வதிலும், விழாக்களுக்கு வாழ்த்துச் செய்திகள் அனுப்புவதி லும் பேருக்கம் கொண்டவர். சீரோங்கும் தெய்வ நெறி நிற்கும் சீர்மையாளர்.

இத்தகைய அறச்செல்வரின் மணிவிழாச் செய்தி கேட்டு மட்டற்ற மகிழ்ச்சி அடைகிருேம். மணிவிழாக் கண்ட அன்பர் மகாலிங்கனுர் அவர்களும் அவர்தம் சீரிய பணிகட்கெல்லாம் துணை நிற்கும் அவர் தம் இல்லத்தரசியார் திருமதி மாரியம்மாள் அவர்களும் அவர் தம் மக்களும் மேலும் பல்லாண்டு பல்லாண்டு சிறப்புடன் வாழ்ந்து, முத்துவிழா நூற்ருண்டு விழா என விழாக்கள் பலகண்டு வையத்துள் வாழ்வாங்கு வாழ அம்மை அம்பலவாணன் திருவடிகளை வழுத்துகிருேம்.

———

# கழகம் சுப்பையா பிள்ளை - மறைமலையடிகளார் தேவநேயப் பாவாணர் அறக்கட்டளைகள்

சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பன்னிரு தமிழறிஞர்கள் பெயரில் அறக்கட்டளைகளை நிறுவ முற்பட்டுள்ளது. முதற்கண் சிலம்புச் செல்வர் டாக்டர். ம. பொ. சிவஞானம் அவர்களின் பெயரில் அறக்கட்டளை நிறுவ ஏற்பாடாகியுள்ளது. அது போல கழக ஆட்சியாளர் தாமரைத்திரு. வ. சுப்பையா பிள்ளை, தனித்தமிழ்த் தந்தை மறைத்திரு. மறைமலையடிகளார், மொழி ஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் ஆகிய மூவர் பெயர்களிலும் தனித்தனி அறக்கட்டளைகள் நிறுவத் திட்டமிடப் பெற்றுள்ளது.

இவ் அறக்கட்டளைகள் சார்பில் ஆண்டுதோறும் குறிப்பிட்ட பொருள் பற்றிய மூன்று சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெறும். அவை நூல்வடிவில் அவ்வமயமே வெளியிடவும் பெறும். கழகம் சுப்பையா பிள்ளை அறக்கட்டளையின் சார்பில் தமிழ்நூல் பதிப்புத் துறை, சைவ சித்தாந்தம் பற்றியும், மறைத்திரு மறைமலையடிகளார் அறக்கட்டளையின் சார்பில் சைவ சமயம், தனித் தமிழியக்கம் பற்றியும், மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அறக்கட்டளையின் சார்பில் சொல்லாராய்ச்சி, அகரமுதலித் துறைகள் பற்றியும் அவ்வத்துறைகளில் அறிவாற்றல் மிக்க சான்றோர் சொற்பொழிவுகள் நிகழ்த்த அழைக்கப் பெறுவர். ஆண்டுதோறும் இவ்வாறு பலவேறு துறைகளில் பல்வேறு அறிஞர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்துவது தமிழாய்வு நன்முறையில் வளர்வதற்குத் தூண்டுதலாயிருக்கும்.

ஒவ்வொருவர் பெயரிலும் அறக்கட்டளை நிறுவுவதற்கு ரூ. பத்தாயிரம் (ரூ. 10,000) வைப்புநிதி வைத்தல்வேண்டும். இதினின்று கிடைக்கும் வட்டித் தொகை சொற்பொழிவாளர்கட்குக் கைம்மாறாக அளிக்கப்பெறும்.

ஆட்சியாளர் வ. சு., அடிகளார், பாவாணர் போன்ற பெரும் புலவர்களும் பேரறிஞர்களும் தமிழ் மொழிக்கும் சமயத்திற்கும் பெருந் தொண்டாற்றியுள்ளனர். அவர்கள் பெயர்கள் நிலைத்து நிற்கவும் அவர்கள் பாடுபட்ட துறைகள் ஓங்கி வளரவும் இத்தகைய அறக்கட்டளைகள் பெருந் துணையாய் நிற்கும்.

இவ் அறக்கட்டளைக்கான தொகையை ஒருவரோ அல்லது ஒரு நிறுவனமோ செலுத்துவதென்பது இயலாத செயல். மேலும் அவர்கள் வழியில் நின்று பணியாற்றும் அன்பர்கள் அனைவரும் ஈடுபட்டு இத்தகைய அறக்கட்டளைகளை நிறுவுவது அவர்கட்கு நாம் செலுத்தும் நன்றிக் கடனாக அமையும்.

எனவே, இம் முப்பெரும் அறிஞர்கள்பால் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் தம்மாலியன்ற பொருளுதவியைச் செய்தல்

வேண்டும். இதுபற்றிய பிற செய்திகட்கு இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113 அல்லது ஆட்சியாளர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், அ. பெ. எண். 85, சென்னை, 600 108 என்ற முகவரிகளுடன் தொடர்பு கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளப் பெறுகின்றனர்.

# செய்திகளும் குறிப்புகளும்

## உலகத் தமிழ்க் கழகத்தின் மாநில செயற்குழுக் கூட்டம்

சேலம் அம்மாப்பேட்டை, அரிமா பதிப்பகம் "பாவாணர் நிலைய"த்தில் 20-3-83 அன்று உலகத் தமிழ்க் கழகத்தின் மாநில செயற்குழுக் கூட்டம் மாநிலத் தலைவர் ம. மூ. சின்னுண்டார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தாமரைத் திரு. வ. சு. அவர்களின் மறைவு குறித்து இரங்கல் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது, மற்றும் கோலார் தங்க வயல் மொழியுரிமைப் போராட்டத்தில் உயிர்நீத்த தமிழ் மறவர்கட்கு இரங்கல் தெரிவித்தும், ஈழத் தமிழர் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்தும், மக்களிடையே தமிழ் உணர்வைப் பரப்புவதுபற்றியும், திரு. வி. க. நூற்றூண்டு விழாக் கொண்டாடுவதுபற்றியும், சென்னை நகரில் பாவாணர் சிலையொன்று நிறுவ அரசினரை வேண்டியும், பாவாணர் நூல்களை நாட்டுடைமை ஆக்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பெற்றன. கழகப் பொதுச்செயலாளர் செங்கை செந்தமிழ்க் கிழார் வரவேற்புரை ஆற்றினர். கதிர் தமிழ்வாணன் நன்றி கூறினர்.

## திருவடிப் புகழ்ச்சி - தெளிவுரை நூல் வெளியீட்டு விழா

சிந்தாதிரிப்பேட்டை திரு. பால சைவ சுத்த சன்மார்க்க சங்கத்தின் சார்பில் 3-3-83 மாலை, சிந்தாதிரிப்பேட்டை கல்யாணம் மகளிர் மேல்நிலைப் பள்ளியில், திரு. சி. கே. துரைவேலன், எம்.ஏ., பி.எல் அவர்கள் தலைமையில், வாழ்வியற் புலவர் தவத்திரு. தேமொழியார் வழங்கிய, இராமலிங்க அடிகளாரின் திருவடிப் புகழ்ச்சி - தெளிவுரை நூலை, வடலூர் தவத்திரு ஊரன் அடிகள், சிறப்புரை ஆற்றி வெளியிட அதன் முதற்படியை, கயப்பாக்கம் அறச்சுடர் கா. முத்துலிங்கா ரெட்டியாரவர்கள் பெற்றுக்கொண்டார்கள்.

## குலசை அருள்மிகு இராமநாத அடிகள் பதினெுன்ரும் ஆண்டு குருபூசை விழா

குலசை அருள்மிகு இராமநாத அடிகள் பதினெுன்ரும் ஆண்டு குருபூசை விழா 26-3-83 அன்று, சைதாப்பேட்டை திருக்காரணீசுவரர் கோயிலில், அடிகளாரின் மாணவர் புலவர் மு. ந. மாசிலாமணி, R. I. M. P., B. Litt. அவர்கள் முன்னின்று நடத்தச் சிறப்பாக நடைபெற்றது. 'அடிகளார் தமிழ்த் தொண்டு' என்னும் பொருள் பற்றி புலவர் மீ. ச. நடேசனர் அவர்களும், திருவாளர் சு. பாலகுண்டு அவர்கள், "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்னும் பொருள் பற்றியும் பேசினர்.

**திருவாவடுதுறை ஆதீனத்தலைவர் தவத்திரு. அம்பலவாண தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் இறையடி பெய்தினர்.**

திருவாவடுதுறை ஆதீனத்தலைவர் தவத்திரு. அம்பலவாண தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் 7-4-1983 இரவு, திருவடிப் பேறெய்தினர். சுவாமிகள் 1967-ல் திருவாவடுதுறை திருமடத்தின் தலைவராய்ப் பட்டம் ஏற்றார். இப்போது இவரை அடுத்து அருட்டிரு சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் பட்டத்திற்கு வந்துள்ளார்.

---

**மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை**

(செல்வி சிலம்பு-௫௭, பரல் எ. ௩௨௪ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப். அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, சீனி விசுவநாதன் | 10—00 |

# மதிப்புரை

**அன்னை மொழியும் ஆட்சித்துறையும்**

[ஆசிரியர் : தமிழ்த்தொண்டர் கோ. முத்துப் பிள்ளை, முத்தமிழ் நிலையம், 24, ஆறுவது குறுக்குச்சாலை, மகாகவி பாரதிநகர், சென்னை-600039, விலை : ரூ 5-00.]

ஆங்கிலத்துக் கிடாகத் தமிழைக் கொண்டு ஆட்சி நடத்த இயலுமா என்று நினைத்தவர்களும் கேட்டவர்களும் உண்டு. ஆனால் இன்று அப்படிப்பட்ட நிலைமாறி, ஆங்கிலத்துக்குத் துணை போன அன்பர்கள் பலர் தம்மையும் அறியாமல் நல்ல தனித் தமிழில் பேசவும் எழுதவுமான சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. அந்த அளவுக்கு திரு. கோ. முத்துப்பிள்ளை போன்ற தமிழ் ஆர்வலர்கள் ஆய்ந்து ஆய்ந்து தேடித்தேடி நல்ல பொருத்தமான தமிழ்ச் சொற்களைக் கண்டெடுத்து அவற்றை மக்களிடையே நடமாட விட்டிருக்கிறார்கள் என்றால் அது மிகையாகாது. அத்தகைய முயற்சிகளுள் ஒன்றுதான் 'அன்னை மொழியும் ஆட்சித் துறையும்' என்னும் இந்நூல். இதில் தனித்தமிழ்ச் சொற்களை எப்படியெல்லாம் நடைமுறைக்குக் கொண்டு வரலாம் என்பதை, தாம் கொண்ட பட்டறிவு முறையின் மூலம் நயமாகவும், நகைச்சுவை கலந்தும் சிக்கறுத்துச் சீர்மைப்படுத்திக் கூறுகிறார் ஆசிரியர். நூலின் இறுதியில் கலைச்சொற்களின் பட்டியல் ஒன்று இணைக்கப்பட்டுள்ளது. அஃதொரு பயனுள்ளபணி. ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது—வரவேற்கத்தக்கது. பயனுள்ளது.

## சுப்பிரமணிய பாரதியின்
## கண்ணன் பாட்டு—காப்பிய நாடகம்—கூவும் குயில்

[ஆசிரியர்: க. சி. கமலையா, தமிழ்ப் புத்தகாலயம், 58, டி. பி. கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600005, ரூ. 6. 00]

பாரதியார் நூற்றுண்டு விழாவினை முன்னிட்டு, பாரதியார் பற்றிய நூல்கள் பல இந்நாளில் வெளிவரக் காண்கிறோம். அவ் வகையில் திரு. க. சி. கமலையா அவர்களின் முயற்சியின் விளைவாக வெளிவந்திருக்கும் நல்ல திறனாய்வு நூலே இது. பாரதியார் இலக்கியங்கள் பற்றி ஆய்வுரை செய்வோர்க்கு இஃதொரு வழிகாட்டியாகப் பயன்படக் கூடும். ஆழ்வார்களின் அருளிச் செயலைக் கண்ணன் பாட்டிலும், நாடகப் பாங்கினைப் பாஞ்சாலி சபதத்திலும், கற்பனைத் திறனைக் குயிற் பாட்டிலும் கண்டு களிக்க உதவும் அரிய திறனாய்வு நூல்.

## மேடை மின்னல்

[ஆசிரியர்: மு. முத்துக்காளத்தி, எம்.ஏ., பாரி நிலையம், 184, பிராட்வே, சென்னை-600108. ரூ. 10-75]

எங்கெங்கே மேடையுண்டோ அங்கெல்லாம் தமது பட்டறிவைப் பாநயத்தால் பரவச்செய்ய ஆசிரியர் மேற்கொண்ட முயற்சியின் விளைவாகத் தோன்றியதே இம் மேடை மின்னல். கவியரங்கம்—மாநாடுகள், மன்றல் மேடைகள்—மணிவிழாக் கூடங்கள்—மாண்புடையோர் பிறந்தநாள் விழா மேடை—இரங்கல் மேடை, எழுச்சி மேடை—புகழ்ச்சி மேடை என்றின்ன பிற சிறப்பு மேடைகளிலெல்லாம் பாடிய புதுக் கவிதைகளாகவும் மரபுக் கவிதைகளாகவும் மின்னுகின்றன ஆசிரியரின் கருத்து மின்னல்கள். இம் மேடை மின்னலுக்கு மேன்மை சேர்க்கின்றன மேதைகளின் பாராட்டு மின்னல்கள். பதிப்பு முறையில் பட்டொளி வீசுகின்றது. பயனுள்ள—சுவையுள்ள நூல்.

## நிலா முற்றம்

[ஆசிரியர்: கவிஞர் வேலூர் ம. நாராயணன, எம்.ஏ.
நிறைவாணன் பதிப்பகம், தமிழ்ச்சோலை, 57, சர்க்கார் மண்டி வீதி,
வேலூர் (வ. ஆ) ரூ. 8-00]

எண்ணத்தில் உள்ளனத ஏட்டில் எழுத, கவிதைக் கலையைக் கருவியாக்கித் தமிழின் மாண்பு, தமிழர் நிலை, இனப்பற்று, நாட்டுப்பற்று, பகுத்தறிவு, தொழிலாளர் நிலை ஆகிய பொருள்கள் பற்றி, இனிய எளிய கற்பனை நயம் பொருந்திய எழுபத்தாறு தலைப்புகளில் கவிதைகளைத் தொகுத்து இந்த 'நிலா முற்றம்' என்னும் அழகிய தண்ணிய முற்றத்தில் வழங்குகிறார் கவிஞர் நாராயணனார். சொற்சுவைக் கவிஞர் சுரதா அவர்களின் அறிமுகக் கவிதையுடன் நூல் துவங்குகிறது. எனவே, இந்நூலின் சிறப்புப் பற்றி அதிகம் கூறத் தேவையில்லை. படித்துச் சுவைக்கத்தக்க பயனுள்ள கவிதைகள்.

(ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் தவத்திரு. இராமகிருஷ்ணர் பிறந்த நாள் சிறப்பிதழ்)

திரு. ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர். விலை ரூ. 1-20

தவத்திரு. இராமகிருட்டிணரின் 148-வது பிறந்த நாள் சிறப்பிதழாக வெளி வந்திருக்கின்ற இவ்விதழில், பல அரிய உயிருணர்வுக் கட்டுரைகளும், தத்துவ விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன. வாரியாரின் 'அப்பர் செய்த புரட்சி' எனும் கட்டுரை குறிப்பிடத்தக்கதாகும்.

மு. சதாசிவம் எம். ஏ. அவர்கள் வெளியிட்டுள்ள திருக்குறள் நூல்கள்

1. வள்ளுவர் வழங்கும் அறிவுரைகள் விலை ரூ. 2-00

திருக்குறள் கருத்துகள் அனைத்தும் அறிவுரைகள் மூலமாகத் தரப்பெற்றுள்ளன. காட்டாக. 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்ற குறளின் கருத்தைச் 'செயற்கரிய செய்க' என்று அமைத்துத் தந்துள்ளார் ஆசிரியர்.

2. வள்ளுவரின் கட்டளைகள். விலை ரூ. 1-75,

'செய்க' என்று வள்ளுவர் விதித்தவை முதல் பாகத்திலும் 'செய்யற்க' என்று விலக்கியவை இரண்டாம் பாகத்திலும் தரப் பெற்றுள்ளன.

3. வள்ளுவர் வினவிய வினுக்கள் விலை ரூ. 0-75

வினுப் பிறக்கும்போது சிந்தனை தூண்டப்படுகிறது. வள்ளுவர் என்னென்ன வினுக்களை எழுப்பி என்னென்ன விடைகளைக் கூறியுள்ளார் என்பதை அறிய உதவும் நூல்.

4. குட்டித் திருக்குறள் விலை ரூ. 3-50

கருத்து முற்றுப்பெற்ற முக்கால் வரி அல்லது ஒரு வரிக் குறட்பாக்கள் தொகுக்கப்பெற்று அகரவரிசையில் தரப் பெற்றுள்ளன. பொருளும் தரப்பெற்றுள்ளது. ஆத்திசூடி போலத் திருக்குறளை ஓதுவதற்கு எளிதாக அமைந்துள்ளது.

5. திருக்குறள் நொடி வினுவிடை விலை ரூ. 10-00

புதுமுறையில் தொகுக்கப்பெற்ற இந் நூலில் வினுக்களிலேயே விடைகளும் தொக்கியிருக்கின்றன. திருக்குறட்பாக்களைப் பொருளுடன் உள்ளத்தில் பதிய வைத்துக் கொள்வதற்கு உதவும் நூல்.

ஐந்து நூல்களும் கிடைக்குமிடம் :

மீரா நிலயம் 35, பாப்பாத்திக்காடு முதல் தெரு, ஈரோடு-4.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.